## எழுத்தாளர்களுக்கு

நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள், பொன்மொழிகள், மகான்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு.

மக்களுக்குப் பயன்படுவதாகவும், சுருக்கமாகவும் கருத்தாழம் கொண்டதாகவும் எழுத்தோவியம் அமைவது முற்றிலும் அவசியம். காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும், வரிக்கு வரி நிறைய இடம் விட்டு, எளிய தமிழ் நடையில் தெளிவாக எழுதப்பட வேண்டும்.

பத்திரிகையில் வெளியிடப்படுவதாக இருந்தால், அனுப்பியவருக்கு ஒரு வார காலத்திற்குள்ளாக ஆசிரியர் சார்பாகப் பதில் கிடைத்துவிடும். அவ்விதம் பதில் பெருத அன்பர்கள், போதிய தபால் தலைகளை அனுப்பிவைத்துத் தமது படைப்புக்களைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டுகிறோம்.

ஆசிரியர்

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்**

## ஓர் அழைப்பு

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிக்கைக்குத் தற்சமயம் 245 ஊர்களில் பத்திரிகை விற்பனையாளர்கள் ஏஜண்டுகளாக நியமிக்கப்பட்டுள்ளனர். இப் பத்திரிகையின் மேல் ஈடுபாடு கொண்டுள்ள அன்பர்கள் அல்லது பத்திரிகை விற்பனையாளர்கள் ஏஜண்டுகள் நியமிக்கப்படாத ஊர்களுக்கு ஏஜன்சி எடுத்துப் பிரதிகளை விநியோகிக்க விரும்பினல், அதற்குரிய விதிமுறைகளை எங்களுக்கு எழுதிப் பெறலாம்.

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்**

## சந்தாதாரர்களுக்கு

தங்களுக்கு பிரதிகள் அனுப்பப்படுவது சம்பந்தமாக ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயத்திற்குக் கடிதம் எழுதி பதில் பெற விரும்பும் சந்தாதாரர்கள், தங்கள் கடிதத்துடன் போதிய தபால்தலைகளை இணைத்து அனுப்புவது நலம்.

தங்களுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் விலாசத்தைக் கவனமாகச் சரிபார்த்துக் குறை யிருந்தாலோ, முகவரி மாற்றம் செய்து கொண்டாலோ உடனுக்குடன் தகவல் தெரிவியுங்கள்

ஆங்கில மாத 15-ம் தேதி வரையிலும் தங்களுக்குப் பத்திரிகை வந்து சேராவிட்டால், கடிதம் எழுதி காரியாலயத்திற்குத் தகவல் தெரிவிக்கக் கோருகிறோம்.

## டெபாசிட் முறை

ஆண்டுதோறும் ரூ. 10 சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூபாய் 125 டெபாசிட் செய்துவிட்டால், தொடர்ந்து மாதந்தோறும் ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகை வந்துகொண்டிருக்கும் பத்திரிகை வேண்டாம் என்று (குறைந்தது ஆறு வருடங்களுக்குப் பிறகு) கருதும்போது தாங்கள் டெபாசிட் செய்த முழுத் தொகையாகிய ரூபாய் நூற்றிருபத்தைந்தையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். டெபாசிட் முறை வெளிநாட்டுக்கு இல்லை.

நிர்வாகி

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்**

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—59 | மே 1979 | இதழ்—5 |
| --- | --- | --- |


## பொருளடக்கம் 

# எங்கள் தமிழ் நூல்கள் வெளியீடு

## I. ராமகிருஷ்ணர்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவருடைய சீடர்களும் | 11 | 00 |
| ,, ,, காலிகோ | 12 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரது திவ்விய சரிதப் பாடல் | 4 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | (அச்சில்) | |
| ஸ்ரீ ராமகிருஷ்ண கதாமிருதம் (முதல் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டாம் பாகம்) | 8 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் | 8 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண உபநிஷதம் | 1 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன கதைகள் | 2 | 75 |
| குருதேவர் வாக்கியம் | 1 | 25 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் கதை | 0 | 35 |

## II. சாரதாதேவியார்

| | | |
|---|---|---|
| ஸ்ரீ சாரதா தேவியார் அவரது வரலாறும் திருவாக்கும் | (அச்சில்) | |
| ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் | 1 | 50 |
| தூய அன்னையார் ஸ்ரீ சாரதாமணி தேவியார் | 1 | 25 |

## III. சுவாமி விவேகானந்தர்

| | | |
|---|---|---|
| சுவாமி விவேகானந்தர் ரா. கணபதி | (அச்சில்) | |
| ஸ்ரீ விவேகானந்தர் சரிதம் | 3 | 00 |
| சிறுவர்களது விவேகானந்தர் | 2 | 00 |
| சுவாமி விவேகானந்தரின் சம்பாஷணைகள் | 6 | 00 |
| ,, ,, காலிகோ | 7 | 00 |
| இந்தியப் பிரசங்கங்கள் | 4 | 50 |
| ,, ,, காலிகோ | 6 | 00 |
| கர்மயோகம் | 2 | 00 |
| பக்தியோகம் | 1 | 50 |
| இராஜயோக உரைகள் | 2 | 50 |
| அருளுரை | 1 | 75 |
| நமது தாய் நாடு | 1 | 50 |
| கல்வி | 2 | 50 |

| | ரூ. | பை |
|---|---|---|
| பாரதப் பெண்மணிகள் | 2 | 50 |
| தற்கால இந்தியா | 1 | 00 |
| சிகாகோ பிரசங்கம் | 1 | 00 |
| எனது வாழ்வும் பணியும் | 0 | 85 |
| எனது போர்முறை | 0 | 75 |
| எனது குருநாதர் | 1 | 25 |
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் | 0 | 60 |
| விவேகானந்தர் பாதையிலே... | 0 | 50 |

## IV. இதர நூல்கள் :

| | | |
|---|---|---|
| ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகளின் வரலாறும் ஞானோபதேசமும் | 3 | 00 |
| சுவாமி ராமகிருஷ்ணானந்தர் | 3 | 50 |
| மகான் துர்க்காசரண நாகர் | 1 | 50 |
| திரு அருள் மொழி | 6 | 00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | 3 | 00 |
| இந்துமத ஸாரம் | 3 | 00 |
| பக்தி ஸாரம் | 2 | 25 |
| பக்தி மார்க்கம் | 1 | 00 |
| நாரதர் கலகம் | 4 | 75 |
| கடோபநிஷதம் (நாடகம்) | 2 | 00 |
| ப்ரச்னோபநிஷதம் (நாடகம்) | 2 | 00 |
| வேதாந்த ஸாரம் | 1 | 25 |
| ,, ,, காலிகோ | 2 | 00 |
| பஜனாவளி | 5 | 00 |
| ஆத்ம நிவேதனம் | 2 | 00 |
| நடராஜ வடிவம் | 0 | 35 |
| ஸ்ரீராம நாம ஸங்கீர்த்தனம் | 0 | 20 |
| ஆராத்ரிகம் | 0 | 20 |

## V. முரசு நூல்கள் : (பாக்கட் சைஸ்)

| | | |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஞான முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சாரதாதேவியாரின் அன்பு முரசு | 0 | 80 |
| ஸ்ரீ விவேகானந்தரின் வீர முரசு | 0 | 80 |
| ஸ்ரீ கிருஷ்ணரின் யோக முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சங்கரரின் வேதாந்த முரசு | 0 | 80 |
| புத்தரின் அறமுரசு | 0 | 80 |
| இயேசு கிறிஸ்துவின் அருள் முரசு | 0 | 80 |



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் : : சென்னை—4



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்

தொகுதி 59 || சித்தார்த்தி ஹு வைகாசி மீ || இதழ் 5




अविकाराय शुद्धाय नित्याय परमात्मने ।
सदैकरूपरूपाय विष्णवे सर्वजिष्णवे ॥

—विष्णुपुराणम्, 1-2-1.

அவிகாராய சுத்தாய நித்யாய பரமாத்மநே |
ஸதைகரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே ॥

—விஷ்ணுபுராணம் 1-2-1.

மாறுதலற்றவனும், தூயனும், நித்தியனும், பரமாத்மாவானவனும், எப்பொழுதும் ஏகரூபனும், எல்லாவற்றையும் வெல்லும் சர்வ வல்லவனுமான மகாவிஷ்ணுவை வணங்குகிறேன்.

எல்லா உலகமும் ஆனுய் நீயே
ஏகம்பம் மேவி யிருந்தாய் நீயே
நல்லாரை நன்மை யறிவாய் நீயே
ஞானச் சுடர் விளக்காய் நின்ருய் நீயே
பொல்லா வினைகள் அறுப்பாய் நீயே
புகழ்ச்சே வடிஎன்மேல் வைத்தாய் நீயே
செல்வாய செல்வம் தருவாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

—திருநாவுக்கரசர்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

## ஞாயிறு, ஏப்ரல் 8, 1883

பவதாரிணி, ராதாகாந்தர், பன்னிரு சிவால யங்கள் ஆகியவற்றில் பூஜை முடிந்துவிட்டது. அடுத்தபடி, தெய்வங்களுக்கு நைவேத்தியம் சமர்ப்பிப்பதற்காக மணிகள் அடிக்கப்பட்டன. அன்று கோடைக்காலப் பகலாகையால், வெயில் மிகவும் கடுமையாக இருந்தது. கடல் பொங்கி யதனால் கங்கையில் நீர்மட்டம் உயர்ந்து கங்கை வடதிசை நோக்கிப் பெருகியது. தென்திசை யிலிருந்து இளங்காற்று வீசிக்கொண்டிருந்தது. குருதேவர் பகல் உணவிற்குப் பிறகு தமது அறையில் இளைப்பாறிக்கொண்டிருந்தார்.

ராக்காலுடைய ஊர் கல்கத்தா அருகிலுள்ள பஷீர்காட் என்னும் இடத்திற்கு அருகில் இருந்தது. அந்த ஊரில் கோடைக் காலத்தில் மக்கள் தண்ணீருக்கு மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந் தார்கள்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** (மணிலாலைப் பார்த்து) ராக்கால் தன் ஊரில் தண்ணீர்க் கஷ்டம் மிகுந்திருப் பதாகச் சொன்னான். நீ அங்கு ஒரு குளம் வெட்டித் தரக் கூடாதா? அப்படிச் செய்தால் எவ்வளவோ மக்களுக்கு உதவியாக இருக்கும். (புன்சிரிப்புடன்) உன்னிடம்தான் நிறையப் பணம் இருக்கிறதே; அவ்வளவு பணத்தையும் வைத்துக் கொண்டு நீ என்ன செய்யப்போகிறாய்? ஆனால் நான் 'தேலிகள்* (எண்ணெய் வியாபாரிகள்) பண விஷயத்தில் ரொம்பவும் கணக்குப் பார்ப்பவர்கள்' என்று கேள்விப்பட்டிருக்கிறேன். (குருதேவர் சிரித்தார். அவருடன் அங்கிருந்த பக்தர்களும் சிரித்தனர்.)

மணிலால் மல்லிக்கின் வீடு கல்கத்தாவிலுள்ள சிந்தூரியாபட்டி என்னும் இடத்தில் இருந்தது. அவருடைய வீட்டில், சிந்தூரியாபட்டியில் இருந்த பிரம்ம சமாஜக் கிளையின் ஆண்டுவிழா நடை பெறுவது வழக்கம். அந்த விழாவை முன்னிட்டு அவர் பலரைத் தமது வீட்டிற்கு அழைப்பதுண்டு. உற்சவத்திற்கு ஸ்ரீராமகிருஷ்ணரையும் அழைப்பார்.

மணிலாலுக்குப் பராநகரில் ஒரு பெரிய வீடு சொந்தமாக இருந்தது. அங்கு அவர் அடிக்கடி தனிமையில் வந்து தங்குவது வழக்கம். அப்போதெல்லாம் குருதேவரைத் தரிசனம் செய் வார்.

மணிலால் உண்மையாகவே பண விஷயத்தில் ரொம்பவும் கணக்குப் பார்ப்பவர்தாம். அவர் பராநகருக்கு வந்தபோதெல்லாம் பெரும்பாலும் வீட்டிலிருந்து முழுத்தூரத்திற்கும் வண்டி அமர்த்திக் கொண்டு வரமாட்டார். டிராம் வண்டியில் ஏறிக் கொண்டு முதலில் ஸோபா பஜார் வந்து சேருவார். பிறகு அங்கிருந்து நண்பர் ஒருவருடைய வண்டியில் ஏறிக்கொண்டு பராநகர் வந்து சேர்வார். அவரிடம் பணத்திற்குக் குறைவே இல்லை!

இந்த உரையாடல் நடந்த சில ஆண்டுகளுக்குப் பிறகு மணிலால், ஏழை மாணவர்களின் உணவு, உடை வசதிகளுக்காக இருபத்தையாயிரம் ரூபாயை ஒதுக்கிச் செலவு செய்தார்.

மணிலால் பதில் எதுவும் சொல்லாமல் மௌன மாக அமர்ந்திருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு பல விஷயங்களைக் குறித்துப் பேசினார். பிறகு உரையாடலின் இடையில் சமயம் வாய்த்தபோது அவர் குருதேவரிடம், "சுவாமி, குளம் வெட்டு வதைப் பற்றிச் சொன்னீர்கள், அது சரிதான். அதை மட்டும் தாங்கள் சொல்லியிருந்தால் போதுமே. அதைத் தொடர்ந்து 'தேலி'களைக் குறை கூறிப் பேசியது ஏனோ?" என்று கேட்டார்.

---

* மணிலால் எண்ணெய் வியாபாரம் செய்யும் குலத்தில் பிறந்தவர்.

பக்தர்கள் சிலர் எழுந்த சிரிப்பைக் கைகளால் வாய்மூடிச் சிரித்தனர். குருதேவரும் சிரித்தார்.

சிறிது நேரம் சென்றது. கல்கத்தாவிலிருந்து பிரம்ம சமாஜத்துடன் நீண்ட காலமாகத் தொடர்பு கொண்ட பக்தர்கள் சிலர் வந்து சேர்ந்தனர். அவர்களுள் டாகுர்தாஸ் ஸேன் என்பவரும் இருந்தார். அறையில் பல பக்தர்கள் குழுமியிருந்தார்கள். குருதேவர் சிறிய கட்டிலின் மீது வடக்குத் திசையை நோக்கி அமர்ந்திருந்தார். அவர் புன்சிரிப்புடன் ஒரு குழந்தையைப் போல, பிரம்ம சமாஜ அன்பர்களுடன் ஆனந்தமாக உரையாட ஆரம்பித்தார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (பிரம்ம சமாஜத்தவரையும் மற்றப் பக்தர்களையும் பார்த்து): நீங்கள் அடிக்கடி 'பிரேமை, பிரேமை' என்று சொல்கிறீர்களே, அது என்ன அவ்வளவு சுலபத்தில் அடையக் கூடியதா? ஸ்ரீகிருஷ்ண சைதன்யருக்குப் பிரேமைநிலை ஏற்பட்டிருந்தது.

பிரேமைக்கு இரண்டு லட்சணங்கள் உண்டு. முதலாவது லட்சணம், ஒரு மனிதனை அது உலகத்தை அடியோடு மறக்கச் செய்யும். இறைவனிடம் அவன் அவ்வளவு ஆழ்ந்த அன்பு கொள்ளுவதால் வெளியுலக நினைவே அவனுக்கு இல்லாமற் போய்விடுகிறது! சைதன்யதேவர் வனத்தைப் பார்த்து அதைப் பிருந்தாவனம் என்றே நினைத்தார். சமுத்திரத்தைப் பார்த்து அதை அவர் யமுனை என்று கருதினர்.

இரண்டாவது லட்சணம், அனைவருக்கும் மிகவும் பிரியமாக விளங்கும் இந்த உடலின் மீதுகூட 'என்னுடையது' என்ற அபிமானம் அவனுக்கு இருப்பதில்லை. தேகமே ஆத்மா என்ற புத்தி அவனை விட்டு அடியோடு நீங்குகிறது.

பகவானைத் தரிசிக்காவிட்டால் பிரேமை உண்டாகாது. இறைவனை அடைந்துவிட்டதற்குச் சில அறிகுறிகள் உள்ளன. இறைவன்மீது பேரன்பு (அனுராகம்) தலையெடுத்தவனுக்கு இறைவனை அடையக் காலதாமதம் ஆகாது. அவனுக்கு இறைவனைப் பெறும் காலம் சமீபிக்கும். அம்மாதிரியான பேரன்பை வெளிப்படுத்தும் புற அறிகுறிகளாவன: விவேகம், வைராக்கியம், உயிர்களிடத்துத் தயை, சாதுசேவை, சாதுசங்க விருப்பம், இறைவனின் நாமத்தையும் குணங்களையும் பாடுதல், உண்மை பேசுதல் முதலியன. இது போன்று அனுராகத்திற்கு உரிய அடையாளங்களை ஒரு சாதகனிடம் காணும் போது, அவனுக்குக் கடவுளின் தரிசனம் கிடைக்கும் காலம் வெகு தொலைவில் இல்லை என்று உறுதியாகச் சொல்லலாம்.

ஒரு வேலைக்காரனுடைய வீட்டின் நிலைமையைப் பார்த்தே, அவனுடைய எஜமானர் அதைப் பார்க்க வருவதாகத் தீர்மானித்திருக்கிறார் என்பதை உறுதியாகச் சொல்லிவிடலாம். முதலாவதாக, வீட்டைச் சுற்றி அடர்ந்து புதர் போல இருக்கும் செடி கொடிகளை வெட்டி அகற்றிவிடுவார்கள்; கற்கள் குப்பை முதலியவற்றை அப்புறப்படுத்துவார்கள். இரண்டாவதாக, அறைகளில் உள்ள புகைக்கரியையும் ஒட்டடை அழுக்கையும் அப்புறப்படுத்துவர். மூன்றாவதாக, முற்றமும் தரையும் மற்ற இடங்களும் துப்புரவாகப் பெருக்கப்பட்டுச் சுத்தமாக இருக்கும். கடைசியாக, எஜமானரே அந்த வீட்டிற்குக் கம்பளம், புகை குடிக்கும் குழாய் போன்ற பல பொருள்களை அனுப்பிவைப்பார். இவையெல்லாம் வந்து சேர்வதைப் பார்த்தே எஜமானர் மிக விரைவில் அங்கு வந்துவிடுவார் என்பதை நீங்களே சுலபமாகப் புரிந்துகொள்ளலாம்.

**ஒரு பக்தர்:** சுவாமி, புலனடக்கம் பெறுவதற்கு முதலாவது ஒருவன் விவேகம் பழக வேண்டுமா?

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** அப்படியும் ஒரு பாதை இருக்கிறது. அதற்கு விசார மார்க்கம் (விசாரணை செய்யும் நெறி) என்று பெயர். பக்தி மார்க்கத்தின் மூலமாகவும் அந்தக்கரணங்கள் (மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவை அந்தக்கரணங்கள் ஆகும்) தாமே அடங்கிவிடுகின்றன. பக்தியின் மூலம் அந்தக்கரணங்களை அடக்குவது எளிது எனலாம். இறைவனிடம் எவ்வளவுக்கு எவ்வளவு அன்பு அதிகமாகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு புலன் இன்பங்கள் (விஷய சுகங்கள்) சுவையற்றவையாகத் தோன்றும்.

தங்களுடைய குழந்தை இறந்துபோன அன்றைய தினமே, அந்தப் பிரிவாற்றாமையின் வேதனைக் கிடையில், தம்பதிகள் சிற்றின்பத்தை நாடுவார்களா என்ன?

**ஒரு பக்தர்:** என்னால் கடவுளை எங்கே ஆழ்ந்து நேசிக்க முடிகிறது?

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** இறைவனுடைய நாமத்தை ஓதுங்கள்; எல்லாப் பாவங்களும் தொலைந்துவிடும்.

இவ்விதம் நீங்கள் காமக் குரோதங்களையும், உடற் சுகங்களின் மீதுள்ள இச்சையையும் பிறவற்றையும் அழித்துவிட முடியும்.

**ஒரு பக்தர் :** ஆண்டவனின் பெயரை உச்சரிப்பதில் எனக்கு எங்கே விருப்பம் ஏற்படுகிறது?

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** அவருடைய திருநாமத்தில் ருசி ஏற்பட வேண்டும் என்று, மனத்துடிப்புடன் இறைவனிடம் பிரார்த்தனை செய்யுங்கள். அவர் உங்களுடைய இந்தப் பிரார்த்தனையை நிறைவேற்றி வைப்பார்.

* * * *

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** 'சர்வேச்வரி! உனது திருநாமத்திலுங்கூட எனக்கு ருசி ஏற்படவில்லையே!' டைபாய்டு காய்ச்சல் அடிக்கும்போது நோயாளிக்கு உணவு சுவைக்காவிட்டால் அவன் பிழைப்பதற்கே வழியில்லை. ஆனால் கொஞ்சமாவது உணவு சுவைத்தால் அவன் குணமடைவான் என்று எதிர் பார்க்கலாம். ஆகவேதான் பகவானின் நாமத்தில் ருசி வேண்டும். பகவானின் நாமத்தை உச்சரித்த படியே இருக்க வேண்டும். துர்க்கையின் நாமம், கிருஷ்ணனின் நாமம், சிவனது நாமம்—எந்த நாமத்தை வேண்டுமானாலும் சொல்லி இறைவனை அழைக்கலாம். இறைவனின் நாமத்தை ஜபிப்பதில் ஆழ்ந்த பற்றுதல் நாளுக்கு நாள் ஏற்படுமானால், ஆனந்தம் பெருகுமானால், பிறகு எந்தவித ஆபத்துக்கும் இடம் இல்லை. டைபாய்டு ஜுரம் நிச்சயமாக விலகிப் போய்விடும். ஆண்டவனின் திருவருள் நிச்சயம் கிடைக்கும்.

ஒருவனின் மனநிலைக்கு ஏற்பவே பலனும் அமைகிறது. ஒரு நாள் இரண்டு நண்பர்கள் தெரு வழியாகச் சென்றுகொண்டிருந்தார்கள். ஓரிடத்தில் பாகவதம் படிப்பது நடந்து கொண்டிருந்தது. ஒருவன் மற்றொருவனைப் பார்த்து, ''நண்பா! வா! நாம் பாகவதம் கேட்கலாம்'' என்று சொன்னான். இரண்டாவது மனிதன் எட்டிப் பார்த்துவிட்டு வெளியேறினான். ஒரு தாசி வீட்டுக்குள் நுழைந்தான். ஆனால் சிறிது நேரம் கழிந்ததும் அவனுக்கு அந்த இடத்தின் மீது அருவருப்பு உண்டாயிற்று. அவன் தனக்குத் தானே, 'என்ன வெட்கக்கேடு எனக்கு! என் நண்பன் விஷ்ணுபகவானின் பரிசுத்த மொழிகளைக் கவனித்துக் கொண்டிருக்கிறான்; நானோ இங்கு விழுந்து கிடக்கிறேனே!' என்று சொல்லிக் கொண்டான். ஆனால் அதே சமயம் பாகவத சிரவணம் செய்துகொண்டிருந்த நண்பனும் அதில் வெறுப்புக் கொண்டான். அவனும் தனக்குள், 'நான் என்ன முட்டாள்! இங்கே ஒருவன் ஏதோ வளவளத்துக் கொண்டிருக்கிறான்! நான் இங்கே உட்கார்ந்திருக்கிறேனே! என் நண்பன் என்ன இன்பமும் மகிழ்ச்சியும் அனுபவித்துக்கொண்டிருக்கிறான்!' என்று நினைத்துக் கொண்டான். காலகதியில் அவர்கள் இருவரும் இறந்தனர். பாகவதம் கேட்டுக் கொண்டிருந்தவனின் உயிரைக் கொண்டுபோக யமதூதன் வந்து அதை நரகத்திற்கு இழுத்துச் சென்றான். தாசிவீட்டுக்குச் சென்றிருந்த மற்றவனது உயிரைக் கொண்டுபோக விஷ்ணுதூதன் வந்து, அதை வைகுண்டத்திற்கு அழைத்துச் சென்றான்.

உண்மையாகவே பகவான் ஒரு மனிதனது நெஞ்சிற்குள் இருப்பதைக் காண்கிறார். அவன் இன்னது செய்கிறான், இன்ன இடத்தில் வாழ்கிறான் என்பதைக் கொண்டு அவனை மதிப்பிடுவதில்லை. 'ஸ்ரீகிருஷ்ணர் பக்தனின் உள்ளத்திலுள்ள பக்தியை ஏற்றுக்கொள்கிறார்.' ☆

---

ராமநாமம் மனதை வசியம் செய்யவல்லது
ராமநாமம் நரகத்திற்குச் செல்வதை தடுக்க வல்லது
ராமநாமம் மமதை என்ற எண்ணத்தை அழிக்கிறது
ராமநாமம் காசி க்ஷேத்திரத்தைப் போன்றது

ராமநாமம் சுகத்தைக் கொடுக்க வல்லது
ராமநாமம் பூமியில் பிறந்தவர்க்கு நன்மை அளிப்பது
ராமநாமத்தைச் சிவபெருமான் எந்நேரமும் தியானிக்கிறார்
ராமநாமம் பரலோகத்திற்குச் செல்லும் வழியைக் காட்டுகிறது





# சங்கரர் காட்டிய பெருநெறி

பேராசிரியர் டி. கே. நாராயணன், M.Sc.

அழகியதொரு தடாகம். அதில் நீர் நிரம்பிக் காணப்படுகிறது. அழகிய தாமரை மலர்கள் கண்ணைக் கவரும் விதத்தில் பூத்துக் குலுங்குகின்றன. காலைவேளை, செங்கதிரோன் கிழக்கே தன் செங்கிரணங்களுடன் எட்டிப் பார்க்கிறான். அப்பொழுது தாமரையிலை ஒன்றின் மீது பளபள-வென்று முத்து ஒன்று காணப்படுகிறது. முத்து எப்படித் தாமரையிலையின் மீது வந்தது? ஆம், அது முத்து அல்ல, நீர்த்துளி ஒன்றுதான் அவ்விதம் காட்சி தருகிறது. அந்த வேளையில் மெல்லிய காற்று வீசுகிறது. தாமரையிலையின் மீது முத்தைப் போலக் காட்சி தந்த அந்த நீர்த்துளி காற்று அடித்ததில் உண்டான இலையசைவில் கீழே உருண்டோடிவிட்டது. இப்பொழுது அந்த இலையில் நீர்த்துளி இருந்த சுவடே தெரியவில்லை. இதைப் பார்த்தார் ஆதி சங்கரர். உடனே அவருக்கு மானிட வாழ்வைப் பற்றிய ஒரு பேருண்மை புலனாயிற்று. அது கீழ்க்காணும் வார்த்தைகளாக வெளிவந்தது :—

நளிநீதலகதம் ஜலமதிதரலம்
தத்வத் ஜீவிதம் அதிசயசபலம் !

மனிதன் இவ்வுலகில் சில வருடங்களோ பல வருடங்களோ வாழ்கிறான். திடீரென்று ஒரு நாள் அவன் உலகிலிருந்து பிரிந்து சென்றுவிடுகிறான். எங்கே எப்பொழுது எப்படி அவனுக்கு மரணம் சம்பவிக்கும் என்பது யாருக்கும் தெரியாது. தாமரையிலை மீது அழகாக முத்துப் போலக் காட்சி தந்த நீர்த்துளி கண்ணிமைக்கும் நேரத்தில் காணாமற் போனது போல், நேற்று நன்றாக இருந்தவனை, சிரித்துப் பேசி மகிழ்ந்துகொண்டிருந்தவனை இன்று காணோமே! இதுதானா இவ்வுலகின் பெருமை! இதுதானா 'நான், நான்' என்று வாழ்நாள் முழுவதும் மார்தட்டிப் பேசிய மனிதனின் நிலைமை!

இத்தகைய மனிதனின் பரிதாப நிலையைப் பார்த்து ஆதிசங்கரர் மக்களுக்கு அறிவுரை வழங்குகிறார்; "உலகப் பொருள்களின் பின் சென்று 'இன்பம் எங்கே, இன்பம் எங்கே?' என்று ஓயாமல் அலைந்து திரியும் மனிதா! நீ ஏன் இவ்வாறு கானல்நீருக்காக அலைந்து திரியும் மானைப் போல வீணே அலைகிறாய்? இன்பத்தின் இருப்பிடமான இறைவனைத் தேடிக் கண்டுகொள். அந்த இறைவன் உனக்குப் புறம்பாக எங்கேயும் இல்லை; உன்னுள்ளேயே இருக்கிறான். 'நான், நான்' என்ற ஆணவத்தையும் அகங்காரத்தையும் விட்டொழித்த அந்தக் கணமே நீ இறைவனை உணர்ந்துகொள்வாய். நீ செய்ய வேண்டியது ஒன்றுமில்லை.

பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம்
பஜ கோவிந்தம் மூடமதே |
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே
நஹி நஹி ரக்ஷதி டுக்ரிஞ்கரணே ||

"வீணாகத் தர்க்கம் செய்யாமல், வெறும் இலக்கண இலக்கிய அறிவை மட்டும் பெறுவதுடன் நின்றுவிடாமல், எல்லாம் வல்ல இறைவனது புகழைப் பாடி அவனை அறிந்துகொள்வாயாக. உனக்கு நலம் அனைத்தும் உண்டாகும்."

சங்கரர் புகட்டிய பெருநெறியாம் அத்வைதத்தின்படி இறைவனுக்கு அன்னியமாக வேறு எதுவுமே கிடையாது. அனைத்தும் இறைவனே. உள்ளது ஒன்றே. அதுவே பரம்பொருள். ஏனைய அனைத்தும் அந்த ஒரே பரம்பொருளின் பல வடிவங்கள். எந்த எந்தப் பொருள் எப்படி இருந்தாலும், அந்த அனைத்துப் பொருள்களிலும் உள்ளுறையும் அந்தப் பரம்பொருள் தத்துவத்தை நாம் உணரும் அறிவைப் பெற்றுவிட்டால் பிறகு வாழ்விலே துன்பமோ தொல்லையோ ஏற்பட வழியில்லை.

பக்திமார்க்கத்தின் ஆரம்பத்தில் பக்தன் தன்னைத் துர்க்குணங்கள் பல நிறைந்த கிழோனாகவும், இறைவனை மேலான முழுமுதற் பொருளாகவும் கருதி, 'நான் வேறு, அவன் வேறு' என்று கருதுகிறான். இது த்வைத நிலை அல்லது ஆரம்ப நிலை.

பிறகு சாதனையில் மேலே செல்லச் செல்ல, தன்னிடம் இருந்த துர்க்குணங்கள் படிப்படியாக அகல அகல, மேலாம் தெய்வத்தின் சில பல அம்சங்கள் தன்னிடமும் பொருந்தியிருக்கக் கண்டு, தன்னைப் பரம்பொருளின் ஓர் அம்சமாகக் கருது கிறான். இது விசிஷ்டாத்வைத நிலை அல்லது இடை நிலை.

பக்தி முற்றிய நிலையில் அது பூரணஞானமாக மலர்கிறது. மனத்திலுள்ள மாசு அனைத்தும் அகன்ற நிலையில், அடிப்படையில் தனக்கும் இறைவனுக்கும் எந்தவித வேற்றுமையும் இல்லை, 'நானும் அவனும் ஒன்றே' என்ற பெருநிலையை உணர்ந்துகொள்கிறான். இது அத்வைத நிலை அல்லது இறுதி நிலை.

ஆகவே ஞானத்தின் முதிர்ச்சி இரண்டற்ற பெரு நிலையாம் அத்வைத நிலையை அடைவதேயன்றி வேறல்ல.

இந்தக் கொள்கை ஹிந்துசமயத்தில் மட்டும்தான் காணப்படுகிறது என்பதல்ல. கிறிஸ்துவ சமயத்திலும் ஏசுநாதர் இந்த மூன்று நிலைகளையும் அழகாக எடுத்து விளக்குகிறார்.

மக்களின் பல படித்தரங்களுக்கேற்ப அவர் பலவிதமாக உண்மையை விளக்கினார். முதலில், 'பரமண்டலத்திலுள்ள பரமபிதாவை நீங்கள் வழிபடுங்கள்' என்று அவர் மக்களைக் கேட்டுக் கொண்டார். 'Father in Heaven' என்பது இதைக் குறிக்கிறது. இது த்வைத நிலை. அடுத்த நிலையில் அவர், 'I am the Vine, You are the branches' (நான் கொடி, நீங்கள் இலைகள்) என்ற விசிஷ்டாத்வைத நிலையைப் புகட்டினார். பிறகு இறுதியில் முடிவான கருத்தான, 'I and my father are one', 'The Kingdom of God is within you' (நானும் என் பிதாவும் ஒன்றே; பரலோக சாம்ராஜ்யம் உங்களுக்குள்ளேயே உள்ளது) என்ற அத்வைதக் கருத்தைப் புகட்டினார்.

வேற்றுமையில் ஒற்றுமையைக் காணும் அறிவே உண்மையறிவாகும். 'See God in everything' என்ற குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்தரது போதனையும் சங்கரரது அத்வைதக் கருத்தைத்தான் பிரதிபலிக்கிறது.

ஆதிசங்கரர் காட்டிய பெருநெறி உலகம் முழுமைக்கும் பொருந்துவதொன்றாகும். அதை நாம் நமது அன்றாட வாழ்வில் கடைப்பிடிக்கிற அளவு நமது வாழ்வில் அமைதியும் ஆனந்தமும் ஓங்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. *

---

ராமநாமத்தை உச்சரித்தால் அமைதி ஏற்படுகிறது
ராமநாமம் யமபயமற்ற அமைதியை அளிக்கிறது
ராமநாமம் நம் எண்ணத்தைப் பூர்த்தி செய்கிறது
ராமநாமம் ரகுநாயகருக்கே உகந்தது

ராமநாமம் நல்ல கர்மங்களைச் செய்யச் சாதகமானது
ராமநாமம் ஹரிபக்தர்களுக்கு ஐசுவர்யம்போன்றது
ராமநாமம் அன்பைப் பெருக்கச் செய்வது
ராமநாமம் தேகத்திற்குச் சூரியனைப்போல ஒளியைத்தருவது.

ராமநாமம் நல்ல வைபவத்திற்குப் பெருமை தரும் குடை போன்றது
ராமநாமம் ஹரிகீர்தனத்திற்கு ஜீவாதாரமானது.
ராமநாமம் மிகப் பரிசுத்தமான மந்திரமானது.
ராமநாமம் பகைவர்களைக் கொல்லும் யந்திரமானது.






# ஸ்ரீராமானுஜரின் உள்ளம்

## 1

ஸ்ரீரங்கத்தில் நடைபெறும் திருவிழாவைக் காண மக்கள் பல்லாயிரக்கணக்கில் பல பாகங்களி ருந்தும் வந்து குழுமியவண்ணம் இருந்தனர்.

அன்றைய தினம் மிகவும் முக்கியமான கருட சேவைத் திருவிழா நடந்துகொண்டிருந்தது.

ஸ்ரீரங்கநாதர் கருடாழ்வாரின் மீது பவனி வரும் கண்கொள்ளாக் காட்சியைப் பக்தர்கள் கூட்டம் கூட்டமாக நின்று தரிசித்துக்கொண்டிருந்தார்கள். வழி நெடுகிலும் பூ, பழம், வெற்றிலை, பாக்கு கர்ப்பூரம் இப்படிப் பலவற்றை ஆண்டவனுக்குக் காணிக்கையாகச் செலுத்தி, அன்பர்கள் ஆனந்த பரவசத்தில் கண்களில் நீர்மல்க, கரங்களைக் கூப்பிப் பகவானின் சரணாரவிந்தங்களில் மானசிகமாகப் பக்தர்கள் தங்களை அர்ப்பணித்துக் கொண் டிருந்தனர்.

அதே சமயம் அந்தத் தெய்விகச் சூழ்நிலைக்குச் சற்றும் பொருந்தாத காட்சி ஒன்றையும் மக்கள் அங்கே ஓர் இடத்தில் கண்டனர்.

பரந்த மார்பும் திரண்ட தோள்களும் கட்டுமஸ் தான உடலும் கொண்ட அழகிய வாலிபன் ஒருவன் அனைவருடைய கவனத்தையும் கவர்ந்தான். அவன் தன் இடக்கையில் ஒரு பெரிய குடையைப் பிடித்திருந்தான். அதை அவன் தன் தலைக்குப் பிடித்துக்கொள்ளாமல், அழகிய நங்கை ஒருத்தியின் முகத்தின்மீது சூரிய ஒளி படாதவாறு அவள் தலைக்கு மேலே பிடித்திருந்தான். அவனது வலக் கையில் இருந்த விசிறியால் அவளுக்கு இதமாக விசிறிக் கொண்டும் இருந்தான்.

அந்த இளைஞனின் பார்வை, மனம், நினைவு எல்லாமே அவள்மீதே லயித்திருந்தன. அவனுக்குப் புற உலக நினைவு அறவே இல்லை! தன் நடத்தையைப் பற்றி மற்றவர் என்ன நினைப்பர் பேசுவர் என்று அவன் எதையும் பொருட்படுத்திய தாகவே தெரியவில்லை.

அந்தப் பெண்ணையும் வாலிபனையும்தான் அனைவரும் விசித்திரமாகப் பார்த்துக் கிண்டல் செய்து பேசிக்கொண்டே சென்றனர்.

அந்தோ! தாமரையில் அமர்ந்த தேனீ உலகை மறந்து எவ்விதம் தேனை அனுபவிக்குமோ அவ் விதமே அந்த இளைஞன் தன் கண்களால் அவள் அழகைப் பருகியபடி உலகையே மறந்திருந்தான்.

திருவிழாவிற்கு வந்திருந்தும் தம்மைத் தரிசிக்கும் எண்ணமில்லாதிருந்த அந்த இளைஞனுக்குத் தம்மையே காட்டி ஆட்கொள்ள நினைத்தார் போலும் தயாநிதியாகிய ஸ்ரீரங்கநாதர்.

## 2

காவிரிநதியில் குளித்துவிட்டுச் சீடர் தாசரதி யின் தோளைத் தம் இடக் கையால் பிடித்துக் கொண்டு, ஸ்ரீராமானுஜர் தமது ஆசிரமத்தை நோக்கி வந்துகொண்டிருந்தார். ஏழை பங்காள ராகிய அந்த மகானின் பார்வையில் அந்த விநோத மான காட்சி தட்டுப்பட்டது. சற்றே நின்றார். தமது சீடர்களில் ஒருவனைப் பார்த்து, "என் குழந்தாய்! நீ போய் அவமானமோ பயமோ இல்லா மல் அங்கே நின்றுகொண்டிருக்கும் அந்த இளைஞனை என்னிடம் அழைத்து வா" என்று கூறினார்.

அதன்படி சீடன் அந்த இளைஞனின் அருகில் சென்று பலமுறை அழைத்தான். அதன் பிறகுதான் இளைஞனின் கவனம் திரும்பியது. ஆழ்ந்த நித்திரையிலிருந்து திடீரென்று விழித்தவன் போல இளைஞன் தன்னைச் சுதாரித்துக்கொண்டு, தன்னை அழைத்த அந்தணரிடம் கைகூப்பி, "ஐயா, தங்களுக்கு இந்த அடிமையால் ஏதாவது காரியம் ஆக வேண்டுமோ?" என்று பணிவுடன் கேட்டான்.

அதற்கு அந்தணர், "அதோ, அங்கே நின்று கொண்டிருக்கும் யதிராஜர் உன்னிடம் பேச விரும்புகிறார். ஆகவே என்னுடன் சில நிமிடங்கள் வருகிறாயா?" என்று அழைத்தார்.

அதைக் கேட்ட இளைஞன் அந்த அழகியிடம் பிரிய மனம் இல்லாமல் வாடிய முகத்துடன் விடை பெற்று அந்தணருடன் சென்றான்.

ஸ்ரீராமானுஜரை நெருங்கியதும் இளைஞன் அவரது திருவடிகளில் விழுந்து வணங்கி மௌனமாக எழுந்து நின்றான். ஸ்ரீராமானுஜர் அவனிடம் அந்த நங்கையிடம் அப்படி என்ன பெரிதாக விசேஷத்தைக் கண்டு நீ மயங்கி நிற்கிறாய்? அவமானம் சிறிதுமின்றி அனைவரும் பரிகசிக்கும்படி நடந்துகொள்கிறாயே!" என்று கேட்டார்.

இளைஞன் பதில் சொன்னான்: "மகாத்மன்! உலகில் மிகவும் அழகிய பொருள்கள் பல இருந்தும், இந்த நங்கையின் நீண்ட, பிரகாசமான, அழகிய, பெரிய விழிகள் என்னை அவளிடம் மயக்கமுறச் செய்கின்றன. அவள் முகத்தைக் கண்ட மாத்திரத்தில் அந்த விழிகளின் அழகில் என் மனதைப் பறிகொடுத்து, என்ன முயன்றும் என் பார்வையை வேறு பக்கம் திருப்பச் சக்தியற்றவனாகப் பித்துப் பிடித்தவன் போல் ஆகிவிடுகிறேன்."

**ஸ்ரீராமானுஜர்:** அவள் நீ மணந்துகொண்ட மனைவியா?

**இளைஞன்:** இல்லை ஐயா, அவள் நான் மணந்து கொண்ட மனைவி அல்ல. என்றாலும் அவளைத் தவிர வேறு யாரிடமும் இனிமேல் அன்பு வைக்கக் கூடாது என்று முடிவாகத் தீர்மானித்து விட்டேன்.

**ஸ்ரீராமானுஜர்:** உன் பெயரென்ன?

**இளைஞன்:** என் பெயர் தனுர்தாஸன். நான் நிசுல நகரம் என்ற இடத்தைச் சேர்ந்தவன். நான் மல்யுத்த வீரன். ஹேரம்பா என்பது என் அழகிய நங்கையின் பெயர்.

**ஸ்ரீராமானுஜர்:** தனுர்தாஸா, நான் உனக்கு ஹேரம்பாவின் விழிகளையும்விட அழகிய இரண்டு விழிகளைக் காட்டுவேனாகில் நீ அவளை விட்டு விடத் தயாரா? நான் காட்டும் அந்த இடத்தில் அன்பு வைக்கத் தயங்க மாட்டாயே?

**இளைஞன்:** பூஜ்யரே! தாங்கள் காட்டும் விழிகள் என் நங்கையின் விழிகளையும்விட அழகியனவாக இருக்குமேயானால் இவளை விட்டு அந்த விழிகளுக்கு என்னை நான் அர்ப்பணித்துக் கொள்ளத் தயங்க மாட்டேன்.

**ஸ்ரீராமானுஜர்!** அப்படியானால் இன்று மாலை நீ என்னை வந்து பார்.

## 3

அன்று மாலை ஸ்ரீராமானுஜரைக் காணத் தனுர்தாஸன் சென்றான். அவனைத் தம்முடன் அழைத்துக்கொண்டு யதிராஜர் கோவிலுக்குச் சென்றார்.

சந்நிதியில் இருவரும் நின்றார்கள். அப்போது ஸ்ரீராமானுஜரின் திருவருளால், கர்ப்பூர தீபாராதனை ஒளியில் தாமரைக் கண்ணனான ஸ்ரீரங்கநாதரின் அருள்மிகு தரிசனம் தனுர்தாஸனுக்குக் கிடைத்தது. அவன் தெய்விகப் பரவசத்தில் அமிழ்ந்து தன்னையும் உலகையும் மறந்தான். அத்துடன் ஹேரம்பாவின் கண்களின் மீது அவன் கொண்டிருந்த மயக்கமும் அழிந்தது.

இக உலக நினைவு திரும்பப்பெற்ற தனுர்தாஸன் ஸ்ரீராமானுஜரின் திருவடிகளைப் பற்றிக்கொண்டு, "கருணைக் கடலே! என் தெய்வமே! சத்குருவே! தங்களின் திருவருளால் தெய்வத்தைத் தரிசிக்கும் மிகப் பெரிய பாக்கியம் எனக்குக் கிடைத்தது. தேவர்களும் பெறுவதற்கு அறிய தெய்வ தரிசனத்தை என்னைப் பெறும்படி செய்த தங்களுக்கு நான் என்றென்றும் அடிமையாக இருப்பேன். இது வரையிலும் சமுத்திரத்தை மறந்து எனது சிறிய கிணறு தான் உலகம் என்று எண்ணி அதிலேயே வாழ ஆசைப்பட்டேன். சூரியனையே மறந்து, இரவில் ஆந்தையைப் போல மின்மினிப் பூச்சியை மிகவும் ஒளி உள்ளதாகக் கண்டு மகிழ்ந்திருந்தேன். என் அகக் கண்களைத் திறந்த தங்களின் திருவடி நிழலில் என்றென்றும் நான்

இருக்கக் கிருபை புரியுங்கள்'' என்று மனம் உருகிப் பலவாறு கூறினன்.

ஸ்ரீயதிராஜர் தனுர்தாஸனைத் தூக்கித் தம் மார்போடு அன்புடன் அணைத்துக்கொண்டார். குருவின் கிருபையால் தெய்வ தரிசனம் கிடைக்கப்பெற்ற தனுர்தாஸனின் பல கோடி ஜன்ம பாவங்களும் அழிந்தே போயின.

ஹேரம்பா தாசிகுலத்தில் பிறந்தவள். எனினும் அவள் தனுர்தாஸனைத் தான் மணந்துகொண்ட கணவனுகவே மதித்து வாழ்ந்து வந்தாள். தன் கணவனுக்குத் தெய்வ தரிசனம் கிடைத்ததை அறிந்து அவள் மகிழ்ந்தாள். யதிராஜரின் கருணையால் அவளும் இந்திரிய சுகபோகங்களைத் துறந்து அவரையே சரணடைந்தாள். குருவான யதிராஜரின் திருவருளால் அந்தத் தம்பதிகள் இருவரும் காமம் மோகம் போன்ற இழிந்த உணர்வுகள் எரிக்கப்பட்டு, தெய்வத்தையே நடுநாயகமாகக் கொண்டும் தெய்வ அன்பினல் பிணைக்கப்பட்டும் தலைசிறந்த பக்தர்கள் ஆயினர்.

நிசுல நகரை விட்டு ஸ்ரீரங்கத்தில் குருவின் அருகிலேயே அவ்விருவரும் வாழ ஆரம்பித்தனர்.

தனுர்தாஸன் ஹேரம்பா ஆகியோரின் குருபக்தி, கள்ளம் கபடமற்ற நடத்தை, நேர்மை, தியாகம், அன்பு, அடக்கம் போன்ற தெய்விக குணங்களுக்காக மக்கள் அவர்களிடம் அன்புடனும் மரியாதையுடனும் பழகி வந்தனர்.

## 4

ஸ்ரீராமானுஜர் காலையில் காவிரிநதிக்கு நீராடச் செல்வது வழக்கம். அவ்விதம் செல்லும்போது அவர் தம் பிராம்மணச் சீடராகிய தாசரதியின் தோளில் கைவைத்தபடியே செல்வார். நீராடித் திரும்பும்போது தனுர்தாஸனின் தோளைப் பற்றியபடியே தமது மடத்திற்குத் திரும்புவார். ஸ்ரீராமானுஜரின் இந்தச் செயல்-தனுர்தாஸன் தாழ்ந்த குலத்தில் பிறந்தவன் என்பதனல்-மற்றப் பிராம்மணச் சீடர்களுக்கு மனவருத்தத்தைத் தந்தது. அவர்களில் சிலர் தங்கள் குருநாதரின் போக்கு மடத்தனமானது என்று வெளிப்படையாகவும் பேச ஆரம்பித்தனர்.

இந்த நிலையில் ஒரு நாள் தனுர்தாஸன், ஹேரம்பா ஆகியோரின் தெய்விக குணங்களை அனைவருக்கும் உணர்த்த ஸ்ரீராமானுஜர் திருவுள்ளம் கொண்டார்.

ஒரு நாள் இரவு, மடத்தில் அனைவரும் அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்தார்கள். அப்போது யதிராஜர் உலர்த்தப்பட்டிருந்த தம் சீடர்களின் துணிகளிலிருந்து ஒரு கோவணத்திற்குப் போதுமான அளவு துணியைக் கிழித்து எடுத்து வந்துவிட்டார்.



மறுநாள் காலையில் எழுந்த சீடர்கள், தங்கள் துணிகள் கிழிக்கப்பட்டிருந்ததைக் கண்டனர். அப்பப்பா! அவர்களுக்குக் கோபம் வந்ததே பார்க்கலாம்! சரமாரியாக மட்டமான, இழிந்த சொற்களை ஒருவருக்கொருவர் கோபத்தினல் கூசாமல் பொழிந்து தள்ளியபடி மணிக்கணக்காகக் கூச்சலிட்டுச் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். பாவம், இறுதியில் ஸ்ரீராமானுஜரே வந்து அவர்கள் அனைவரையும் சமாதானப்படுத்தும்படி ஆயிற்று.

அன்று இரவு ஸ்ரீராமானுஜர் தம் சீடர்களை அழைத்து, ''இதோ பாருங்கள், இன்று தனுர்தாஸன் இங்கு வந்து என்னுடன் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருப்பான். அந்தச் சமயம் பார்த்து நீங்கள் அவன் வீட்டிற்குச் செல்ல வேண்டும். அவன் மனைவி தூங்கிக்கொண்டிருப்பாள். அவள் உடலிலிருந்து மெதுவாக எல்லா ஆபரணங்களையும் திருடிக்கொண்டு வாருங்கள். இதனல் ஏற்பட்ட நஷ்டத்திற்குத் தனுர்தாஸனும் அவன் மனைவியும் என்ன செய்கிருர்கள் என்று பார்க்கலாம்'' என்று சொன்னுர்.

யதிராஜர் சொன்னபடியே அன்றிரவு சீடர்கள் தனுர்தாஸனின் வீட்டை அடைந்தனர்.

ஹேரம்பா கணவன் வருகையை எதிர்நோக்கி வாயிற்கதவைத் திறந்து வைத்தபடி நன்ருக உறங்கிக் கொண்டிருந்தாள்.

இதுதான் சமயம் என்று சீடர்கள் உள்ளே சென்று, தூங்கிக்கொண்டிருந்த அவள் உடலில் இருந்த ஆபரணங்களைக் கழற்றினர். ஹேரம்பா என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டாள். நகர்ந்தால் அந்தப் பிராம்மணர்கள் எங்கே ஓடிவிடுவார்களோ என்று எண்ணி அசையாமல் படுத்திருந்தாள். ஒரு பக்கத்தில் போட்டிருந்த ஆபரணங்களை எல்லாம் அவர்கள் எடுத்துக் கொண்டபின், மற்ற ஆபரணங்களையும் அவர்கள் எடுத்துக்கொள்ள வசதியாக, தூக்கத்தில் சாதாரணமாகத் திரும்பிப் படுப்பது போல் புரண்டு படுத்துக்

கொண்டாள். ஆனால் பிராம்மணர்களோ அவள் விழித்துக்கொண்டுவிட்டாள் என்று பயந்து, கிடைத்த ஆபரணங்களுடன் ஓடிவிட்டனர்.

5

அவர்கள் நேராக ஸ்ரீராமானுஜரை அடைந்து நடந்த விஷயத்தை இரகசியமாகத் தெரிவித்தனர்.

ஸ்ரீராமானுஜர் தனுர்தாஸனை அழைத்து, ‘‘குழந்தாய்! இருட்டி வெகு நேரமாகிவிட்டதே! நீ இப்போது வீட்டிற்குச் செல்'' என்றார். தனுர்தாஸன், ‘‘என் தெய்வமே! தங்கள் கட்டளை'' என்று கூறிப் பணிவன்போடு அவரை நமஸ்கரித்து விடை பெற்றுக்கொண்டு வீடுநோக்கிச் சென்றான்.

அப்போது ராமானுஜர் தம் சீடர்களிடம், ‘‘நீங்கள் இப்போது தனுர்தாஸன் அறியாவண்ணம் அவனைத் தொடர்ந்து சென்று, அவனும் அவன் மனைவியும் என்ன செய்கிறார்கள் என்று கவனித்து எனக்குத் தெரியப்படுத்துங்கள்'' என்று பணித்தார். சீடர்களும் அவ்விதமே செய்தனர்.

வீட்டில் நுழைந்த தனுர்தாஸன், மனைவி ஒரே ஒரு புறம் மட்டும் நகைகள் அணிந்திருப்பதைக் கண்டான். அவன் ஹேரம்பாவிடம், ‘‘என்ன விஷயம்? ஒருபுறம் மட்டும் நகைகள் அணிந்திருக்கிறாயே, மற்ற நகைகள் எங்கே?'' என்று கேட்டான்.

அதற்கு ஹேரம்பா, ‘‘என் பிரியநாதா! நான் என்னவென்று சொல்வேன்! உண்மையிலேயே அந்தப் பிராம்மணர்களின் வீட்டில் கஷ்டம் இருந்திருக்கும். அதனால்தான் அவர்கள் திருடர்களாக மாறியிருக்கிறார்கள். அப்போது நான் தங்கள் வருகையை எதிர்பார்த்தபடி, மனதில் இறைவன் திருநாமத்தை உச்சரித்தபடி படுத்திருந்தேன். நான் நன்றாக அயர்ந்து உறங்குவதாக நினைத்த அவர்கள், என் உடலின் ஒரு பக்கத்திலிருந்த ஆபரணங்களைக் கழற்றி எடுத்துக்கொண்டார்கள். அவர்கள் என் உடலின் மறு பக்கத்தில் இருக்கும் நகைகளையும் எடுத்துக்கொள்வதற்கு வசதியாக இருக்கட்டுமே என்று நினைத்து நான் திரும்பிப் படுத்தேன். ஆனால் என் துரதிர்ஷ்டம், அவர்கள் ஓடிவிட்டனர்.

மனைவி சொன்னதைக் கேட்ட தனுர்தாஸன் மிகவும் வருந்தினான். அவளிடம் அவன், ‘‘ஆகா! நீ திரும்பிப் படுத்தது எவ்வளவு பெரிய தவறு தெரியுமா? ‘நான்' என்னும் உணர்வு இன்னும் உன்னை விடவில்லையே! ‘இவை எல்லாம் என் நகைகள். நான் அவர்களுக்குக் கொடுக்கிறேன்' என்று நீ நினைத்தாய் போலும். அதனால்தான் பந்தத்திற்குக் காரணமான இந்தத் தங்கத்தைத் துறந்துவிட இருந்த நல்ல ஒரு சந்தர்ப்பத்தை நழுவவிட்டுவிட்டாய். பெண்ணே, உன்னை நீ ஸ்ரீரங்கநாதருக்கே முழுவதும் ஒப்படைத்து அப்படியே அசையாமல் படுத்திருந்திருப்பாயானால், நீ அயர்ந்து உறங்குவதாக நினைத்து, அவர்கள் உன் எல்லா நகைகளையும் கழற்றிச் சென்றிருப்பார்கள். நடந்த நிகழ்ச்சி, ‘நான்' என்னும் அகங்காரத்தை நாம் இன்னும் விடாமல் பற்றியிருக்கிறோம் என்பதையே காட்டுகிறது'' என்று கூறிக் கடிந்துகொண்டான்.

ஹேரம்பா தன் தவற்றை உணர்ந்தாள். அவள் கண்ணீர் விட்டு அழுதபடியே கணவனின் கால்களைப் பற்றிக்கொண்டு, ‘‘என் தெய்வமே, தாங்கள் கருணைகூர்ந்து என் பிழையை மன்னியுங்கள், ‘நான்' ‘எனது' என்னும் அகங்காரம் என்னை விட்டு அகல ஆசீர்வதியுங்கள்'' என்று வணங்கிப் பிரார்த்தித்தாள்.

இவற்றையெல்லாம் யதிராஜரின் பிராம்மணச் சீடர்கள் பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஆணவமும் காமமும் நீங்கிய நிலையில் அந்தத் தம்பதிகள் தெய்வத்தையே நடுநாயகமாகக் கொண்டு வாழ்ந்து வருவதைக் கண்டனர்.

பிறகு அவர்கள் மடத்திற்குத் திரும்பி ஸ்ரீராமானுஜரிடம் எல்லாவற்றையும் விவரமாகத் தெரிவித்துவிட்டு உறங்கச் சென்றனர்.

மறுநாள் ஸ்ரீராமானுஜரைச் சுற்றிப் பிராம்மணச் சீடர்கள் வழக்கம் போல் பாடம் கேட்க உட்கார்ந்தனர். அப்போது யதிராஜர் அவர்களிடம், ‘‘குழந்தைகளே! நீங்கள் அனைவரும் சாஸ்திரங்களை மிகவும் நன்றாகப் படித்திருக்கிறீர்கள். ஆனால் உங்களிடம் ‘நாம் பிராம்மணர்' என்ற கர்வம் தத்துவத்திற்குப் பொருந்தாத வகையில் இருந்துகொண்டிருக்கிறது. உண்மையிலேயே யார் பிராம்மணர் என்பதை உங்கள் நடத்தையிலிருந்து நீங்களே கூறுங்கள். நேற்றுக் காலையில் உங்கள் துணிகளில் சிறிதளவு கிழிக்கப்பட்டிருந்ததைக் கண்டு நீங்கள் எப்படி நடந்துகொண்டீர்கள்? விலையுயர்ந்த நகைகள் களவுபோன நிலையிலும் தனுர்தாஸனும் அவன் மனைவியும் எப்படி நடந்துகொண்டிருக்கிறார்கள்? அவர்கள் நடந்துகொண்ட விதம் சிறந்ததா? நீங்கள் நடந்துகொண்ட விதம்

சிறந்ததா? யாரைப் பக்தர், பிராம்மணர் என்று சொல்வது பொருந்தும்?'' என்று கேட்டார்.

பிராம்மணச் சீடர்கள் அனைவரும் வெட்கித் தலை குனிந்தனர்.

ஸ்ரீராமானுஜர் மேலும் தொடர்ந்து அறிவுரை கூறினார்: ''ஒருவன் பிறப்பால் மட்டுமே ஒரு போதும் பிராம்மணனாக ஆக மாட்டான். செயல்களும் சிந்தனைகளுமே ஒருவன் உயர்ந்தவனா அல்லது தாழ்ந்தவனா என்பதை நிர்ணயிக்கின்றன. இனியேனும் பிராம்மணர்கள் என்ற கர்வத்தை நீக்கி, நல்ல குணங்களோடு தகுதி பெற்றவர்களாக வாழ முயலுங்கள். அகந்தை காரணமாக ஜாதி பேதம் இருக்குமானால் அதைவிடப் பெரிய விரோதி ஒரு பக்தனுக்கு வேறில்லை. துன்மார்க்கத்திலிருந்து காப்பாற்றக் கூடியவர் யாராக இருந்தாலும் அவரை நீங்களே நண்பராக ஏற்றுக்கொள்ளுங்கள்.'' ✮

---

# ஸ்ரீராமபிரான் செய்த பிராயச்சித்தம்

ஒரு சமயம் ரகுகுல திலகமான ஸ்ரீ ராமபிரான் விபீஷணனைப்பற்றிக் கவலை கொள்ள நேர்ந்தது. தமது பரம பக்தனான விபீஷணனைச் சில அந்தணர்கள் சிறைபிடித்து வைத்திருக்கிறார்கள் என்ற செய்தியைக் கேட்டதும் ராமச்சந்திரமூர்த்தி கவலைப்படாமல் என்ன செய்யமுடியும்?

ஸ்ரீராகவன் தமது தூதர்களை நாலா பக்கங்களுக்கும் அனுப்பி, விபீஷணனை தேடும்படி செய்தார். ஒரு வழியாக விபீஷணன் இருக்கும் இடம் தெரியவந்தது ஸ்ரீராமபிரான் தாமே நேரில் சென்றார். அவர் கண்ட காட்சிதான் என்ன! அந்தணர்கள் விபீஷணனின் கைகால்களைக் கட்டி, பூமிக்கடியில் பாதாளச் சிறையில் கைதியாக வைத்திருந்தார்கள்.

சிறந்த பக்தனும் நற்குணங்களைப் பெற்றவனுமாகிய விபீஷணனின் நிலையைக் கண்ட ஸ்ரீ ராமர் அதிர்ச்சியடைந்தார். விபீஷணன் செய்த குற்றம்தான் என்ன என்று அங்கு இருந்த அந்தணர்களைக் கேட்டார்.

ஸ்ரீ ராமபிரானைக் கண்டதுமே அந்தணர்கள் அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். நல்ல முறையில் வரவேற்று உபசரித்தனர். பிறகு ராமபிரானிடம், ''சுவாமி! இந்தக் காட்டுப் பகுதியில் ஒருநாள் எங்களது ஆசிரமத்திற்கு அருகில் ஓர் அரக்கன் தேரில் ஏறிக்கொண்டு வந்தான். எங்கள் ஆசிரமவாசியான ஒரு வயோதிக அந்தணர் தர்ப்பை சேகரிப்பதற்காகக் காட்டிற்குள் சென்றார். அவரோ மௌன விரதத்தை மேற்கொண்டவர். அரக்கன் அந்த அந்தணரிடம் ஏதோ கேட்டான். மௌனத்தைக் கடைப்பிடிப்பவர் வயோதிகர். ஆதலால், அவர் பதில் ஏதும் சொல்லவில்லை. அதனால் கோபமடைந்த அரக்கன் அந்த வயோதிகரை தன் காலால் உதைத்தான். அவரோ வயோதிகர்; உதைபட்டதால் நிலைகுலைந்து கீழே விழுந்தார். உடனே இறந்துவிட்டார். எங்களுக்கு விஷயம் தெரிந்தது. உடனே சென்று அந்த அரக்கனைப் பிடித்து வந்தோம். ஆனால் நாங்கள் எவ்வளவோ அடித்து வதைத்தபோதிலும் இவன் இறக்கவில்லை. தாங்கள் இங்கு வந்திருப்பது நாங்கள் செய்த பாக்கியம்தான். தாங்கள் இந்தக் கொலைகாரப் பாவியைத் தண்டிக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள்.

அந்தணர்கள் விபீஷணனை அதே நிலையில் கைதியாகக்கொண்டுவந்து நிறுத்தினர். விபீஷணனுக்கோ ராமபிரானைக் கண்டதும் தாங்கவொண்ணாத அவமானம் பிடுங்கித் தின்றது. ராமபிரானும் விபீஷணனின் நிலையைக் கண்டு தயங்கினார்.

ஸ்ரீராமபிரான் அந்தணர்களைப் பார்த்து ''எந்த வேலைக்காரனாவது ஒரு தவறு செய்துவிட்டதற்கு அவனது எஜமானன்தான் பொருப்பாளியாக ஆகிறான். ஆகவே தாங்கள் இந்த விபூஷணனை விட்டுவிடுங்கள். நான் இவனுக்குக் கல்பாந்த காலம் வரை வாழுமாறு சாகாவரம் அளித்து இலங்கை ராஜ்யத்தையும் ஆளும்படி கட்டளையிட்டிருக்கிறேன். இவன் என்னுடையவன். ஆகவே இவன் செய்த குற்றம் நான் செய்தது போலவேதான். எனவே நீங்கள் இவனுக்கு என்ன தண்டனையைத் தர விரும்பினீர்களோ அதை எனக்குக் கொடுங்கள். நான் மனமுவந்து ஏற்றுக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன் என்று சொன்னார்.

விபீஷணன் வேண்டுமென்றே அந்தக் கிழவரைக் கொல்லவில்லை. அவரோ வயோதிகர். மௌனவிரதம் கடைபிடிப்பவர். இது விபீஷணனுக்குத் தெரியாது. அவரைக் கொல்லும் எண்ணமும் விபீஷணனுக்குக் கிடையாது. ஆகையால் அறியாமல் செய்த குற்றத்திற்காக விபீஷணன் பிராயச்சித்தம் செய்யவேண்டும் என்று அந்தணர்கள் விரும்பினர்.

ஆனால் விபீஷணன் பிராயச்சித்தம் செய்யவில்லை. மாறாக, ஸ்ரீ ராமபிரான் தாமே தமது பக்தனுக்காகப் பிராயச்சித்தம் செய்தார்! ❋




# பேராசையால் ஏற்பட்ட பெருங்கேடு!

வெகு காலத்திற்கு முன்பு சிருஞ்சயன் என்ற ஓர் அரசர் இருந்தார். அவருக்கு ஒரே ஒரு மகள் இருந்தாள்.

அந்த அரசருக்குத் தமக்கு வாரிசாக ஒரு பிள்ளை இல்லையே என்ற மனக்குறை இருந்தது. எனவே தமது குறையைப் போக்கிக் கொள்ள மறையோதும் சிறந்த அந்தணர்களை அழைத்து உபசரித்து ஆலோசனை கேட்டார்.

அந்தணர்கள் அரசரின் விருந்தோம்பலினால் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்கள். அவர்கள் அரசரின் குறையைப் போக்கி விடும்படி, தேவரிஷியான நாரதரிடம் பிரார்த்தனை செய்தார்கள். அந்தச் சமயத்தில் நாரத முனிவரும் சிருஞ்சயனின் விருந்தினராகத்தான் தங்கியிருந்தார்.

மறைப்பொருளை உணர்ந்த அந்தணர்களின் வேண்டுகோள் நாரதரின் உள்ளத்தை நெகிழ வைத்தது. தேவரிஷியும் அரசரின் குறையைப் போக்கத் திருவுளம் கொண்டார்.

நாரதர் அரசரை அழைத்து அவரிடம், ‘‘மன்னா! உனக்கு எப்படிப்பட்ட பிள்ளை பிறக்க வேண்டும் என்று விரும்புகிறாய்?’’ என்று கேட்டார்.

மன்னர் சாதாரணமான வரத்தைக் கேட்டிருக்கக் கூடாதா? விதி யாரை விட்டது! மன்னரின் உள்ளத்தில் பேராசை புகுந்து விட்டது.

பேராசை மிக்க உள்ளத்துடன் மன்னர் நாரதரை வணங்கி, ‘‘மகரிஷே! எனக்குத் தாங்கள் பிள்ளைவரம் அளிக்க விரும்பினால் நான் கேட்கிறபடியான பிள்ளை பிறக்கும்படி அருளுங்கள். அதாவது—எனக்குப் பிறக்கும் பிள்ளை மிகவும் அழகானவனாகவும், உடல் ஆரோக்கியம் உள்ளவனாகவும் இருக்க வேண்டும். அதோடுகூட அவனது மலம், மூத்திரம், எச்சில், சளி போன்றவைகூடப் பொன்மயமாகவே இருக்க வேண்டும்’’ என்று வேண்டிக் கொண்டான்.

ஒரு சிறிது யோசித்த நாரதரும் எல்லாவற்றையும் எளிதில் கணக்கிட்டுவிட்டு, ‘‘அரசே! தங்கள் விருப்பப்படியே நடந்தேறும்’’ என்ற வரத்தை அருளிவிட்டுத் தம் வழியே புறப்பட்டார்.

நாரத முனிவரின் வரத்தின்படி அரசருக்கு உரிய காலத்தில் ஒருமகன் பிறந்தான். மன்னருக்கோ மட்டற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று.

அரசர் தமது குழந்தைக்கு, ‘சுவர்ணஷ்டீவி’ என்று பெயர் சூட்டினார். அரசரின் மகன் அழுதால் பொன்மழை கொட்டும். மற்ற எந்த அசுத்தங்கள் உடலைவிட்டு வெளி

யேறினாலும் அது பொன்னாகவே இருந்தது. இதனால் அரசருக்கு வருமானம் அதிக மாயிற்று. அரசகுமாரன் எச்சில் துப்புவதும், கோழை உமிழ்வதும், மலம் கழிப்பதும், அரசரின் கஜானாவை பொற்காசுகளால் வழியவழிய நிரப்பின. அரசருக்கோ கரை காணாத இன்பம்!

அரசர் தம்முடைய நிலவறையைப் பொன்னால் நிரப்பினார். பிறகு அரண்மனை யிலுள்ள பாத்திரம் பண்டங்கள், சுவர், கதவு எல்லாப் பொருள்களையும் தங்கமயமாக்கி விட்டார். அரசரின் அரண்மனையில் எல்லாமே பொன்மயம்தான்! தரை, தூண், சுவர், கூரை எங்குப் பார்த்தாலும் தங்கம் ஜொலித்தது.

பொன் அளிக்கும் அரசகுமாரனைப் பற்றிய செய்தி நாடு முழுவதும் பரவியது. நீண்ட தூரத்திலிருந்துகூட மக்கள் சுவர்ணஷ்டீவியைப் பார்க்க வர ஆரம்பித்தனர்.

கொள்ளைக்காரர்கள்கூட அரசகுமாரனைப் பற்றிய செய்தியைத் தெரிந்துகொண் டனர். உடனே அவர்கள் ஒரு கூட்டமாகக் கூடினார்கள். அந்தக் கூட்டத்தில் சிறந்த பல வீரர்களைக் கொண்டு ஒரு குழுவை அமைத்து, அதன் மூலம் அரசகுமாரனைக் கடத்திக்கொண்டு வந்துவிட வேண்டும் என்ற திட்டம் உருவாயிற்று.

அதன்படி ஒருநாள் இரவு கொள்ளைக்காரர்கள் ரகசியமாக அரண்மனைக்குள் புகுந் தார்கள். திட்டமிட்டிருந்தபடி தந்திரமாக அரசகுமாரனைத் தங்கள் இருப்பிடத்திற்குத் தூக்கிச் சென்றுவிட்டார்கள்.

அரசகுமாரனைத் தூக்கி வந்தபிறகு கொள்ளைக்கூட்டத் தலைவர்களிடையே பல வகையான பிரச்னைகள் குறித்துக் கருத்து வேற்றுமை ஏற்படலாயிற்று. எந்த வகை யில் அரசகுமாரனின் கழிவுகளைப் பங்கு பிரித்துக் கொள்வது என்பதுதான் அவர்களது தலையாய பிரச்னை.

அதோடு, அரசர் வேறு, மகனைக் காணாமல் நான்கு திசைகளுக்கும் பல சிறந்த வீரர்களை அனுப்பிவிட்ட செய்தியும் கொள்ளைக்காரர்களுக்குக் கிட்டியது. அரச குமாரனை நீண்ட நாட்களுக்கு மறைத்து வைத்திருப்பது இயலாத காரியமாகப் பட்டது. எனவே கொள்ளைக்கூட்டத் தலைவர்கள் தங்களுக்குள் பேசி ஒரு முடிவுக்கு வந்தனர். அரசகுமாரனைக் கொல்ல வேண்டியது; அதனால் கிடைக்கும் தங்கத்தைத் தங்களுக்குள் ஒற்றுமையுடன் பங்கிட்டுக்கொண்டு சென்றுவிட வேண்டியது—என்ற முடிவுக்கு வந்த கொள்ளைக்காரர்கள் உடனே அதைச் செயற்படுத்தவும் முனைந்தனர்.

ஈவு இரக்கமற்ற கொள்ளைக்கூட்டத்தினர் அரசகுமாரனைக் கொன்றார்கள். அரச குமாரனின் உடல்தான் இரண்டு துண்டுகளாயிற்றே தவிர, அவனது உடலில் ஒரு குன்றிமணியளவுகூடத் தங்கம் இருக்கவில்லை.

பேராசையின் வசப்பட்டு, சிருஞ்சியன் கேட்ட வரத்தினால் அரசகுமாரனைக் காப்பாற்ற முடியாது போயிற்று. அரசருக்கோ பிள்ளையை இழந்து வருந்தும் நிலை ஏற்பட்டது. அதே பேராசை காரணமாகவே திருடர்களும் அரசகுமாரனைக் கொன் றார்கள். இது காரணமாக அவர்களுக்குப் பொருள் எதுவும் கிடைக்கவில்லை. மாறாக, ஓர் அறியாப் பிள்ளையைக் கொன்ற பாவம்தான் ஏற்பட்டது. அரசரின் கோபத்திற்கும் ஆளாயினர்.

ஆக, பேராசையினால் சிருஞ்சயனே பிள்ளையை இழந்தான்; கொள்ளைக்கூட்டத்தினர் உயிரை இழந்தனர்.

இந்தக்கதை மகாபாரதத்தில் இடம் பெற்றுள்ளது. இந்தக் கதை—ஒருவன் பொன் முட்டை இட்ட வாத்தை அறுத்தால் அதன் வயிற்றில் ஏராளமான பொன் முட்டைகள் இருக்கும்; அவை எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் விற்றால் மிகப்பெரிய செல்வச் சீமானாக ஆகிவிடலாம் என்று நினைத்து, அந்த வாத்தைக் கொன்றபோது அதன் வயிற்றில் எதுவும் இல்லாததுடன், ஒவ்வொரு நாளும் தான் அடைந்து வந்த நிரந்தர வருவாயையும் இழந்தான்— என்னும் கதையை நினைவுபடுத்துகிறது.

---

## ஸ்ரீராமானுஜரின் பத்துக் கட்டளைகள்

### வாழ்க்கைக்கு இன்றியமையாத நெறிமுறைகள்

1. கடவுளைச் சரணடைந்த ஒருவன் தன் எதிர்காலத்தைப் பற்றி நினைக்கக் கூடாது. ஏனென்றால் அது கடவுளின் கையில் இருக்கிறது. அப்படி ஒருவன் ஒரு சிறிதளவே ஆயினும் அதைப் பற்றி நினைத்தால் அவன் கடவுளிடம் சரணடைந்தது என்பது ஒரு புராணக் கதையாகவோ கேலிக்கூத்தாகவோ அமையும்.

2. ஒருவனுடைய இப்போதைய நிலைமைக்கு அவனது கடந்தகால ஊழ்வினையே காரணமாகும். எனவே அதைப் பற்றிக் குறைபட்டுக்கொள்ளக் கூடாது. வைணவன் என்பவன் தன் வருங்காலத்தைப் பற்றியோ நிகழ்காலத்தில் நடப்பவை பற்றியோ எந்தவித ஆர்வமும் காட்டக் கூடாது.

3. உன் கடமைகளை ஒரு போதும் முடிவை எண்ணிச் செய்யாதே.

4. உன் கடமைகளை இறைவனுக்குச் செய்யும் தொண்டாக நினைத்துச் செய்.

5. ஸ்ரீபாஷ்யத்தை (பிரம்மசூத்திர உரையைப்) படி. அதைப் படித்து அதில் கூறியவற்றை முடிந்த மட்டில் எங்கும் பரப்பு. இந்தத் தொண்டு கடவுளுக்கு மிகவும் பிடித்தமானது. அப்படிச் செய்ய முடியாவிட்டால்——

6. சடகோபனும் மற்ற ஆழ்வார் அடியார்களும் இயற்றிய புனிதமான நூல்களைப்படி. அந்த விஷயங்களைத் தகுந்த சீடர்களைத் தேடிப் போதித்து விடு. அல்லது——

7. உனது நேரத்தைக் கடவுளுக்குத் தொண்டு செய்வதில் செலவிடு. (ஏழைகளுக்கு உணவளித்தல், இறைவழிபாட்டிற்குத் தேவையான பொருள்களை அளித்தல், கோவிலில் விளக்கேற்றுதல், இறைவனுக்காக அழகிய மாலைகளைத் தொடுத்தல், கோவிலைச் சுத்தம் செய்தல், அழகான வண்ணக் கலவைகள் கொண்டு கோலமிட்டு அலங்கரித்தல் போன்றவை )

8. எனக்குப் பிடித்த இடமான யாதவாத்திரியில் (திருநாராயணபுரத்தில்) குடிசை அமைத்துக் கொண்டு மனக்குறையின்றி முழு அமைதியோடும் மனநிறைவோடும் வாழ்ந்து வா.

9. நீ வசிக்கும் இடத்திலேயே இரு. உன் சுமைகளைக் கடவுளின் மீதோ அல்லது உன் ஞானாசிரியரிடமோ ஒப்படைத்துவிட்டு எப்போதும் அந்த இரண்டு பேருண்மைகளையே (கடவுள்—ஜீவன்) தியானப் பொருளாகக் கருதியிரு.

10. அறிவும் பக்தியும் நடுநிலைப் பண்பும் உள்ள ஒரு வைணவனைக் கண்டுபிடி. அவன் உன்னை மதித்துத் தனக்குச் சொந்தமானவன் என்று நினைக்கக் கூடியவனாகவும் இருக்க வேண்டும். உன் ஆணவம், செருக்கு அனைத்தையும் தூர எறிந்துவிடு. அவன் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நட. இதுதான் நான் சொல்லும் கடைசி வழி. இதைத் தவிர வேறு வழி ஒன்றும் தெரியவில்லை.

'நரேந்திரன்'

# கீதை காட்டும் சமயம்

சுவாமி தபஸ்யானந்தர்



### கர்மவிதியும் மறுபிறப்பும் துவங்குகின்றன

தனித்தன்மை—செயல்சுதந்திரம் வாய்ந்த இந்த ஜீவாத்மாக்கள் இதற்கு முன்பிறவிகளில் செய்த வினைகளுக்கு ஏற்ப, மேலான அல்லது கீழான பிறவிகளில் பிறந்து ஓயாத பிறப்பு இறப்பு என்னும் துன்பம் மிகுந்த சுழற்சியில் சிக்கிக்கொண்டுள்ளன.

ஜீவாத்மாக்கள் இவ்வாறு ஓயாத பிறப்பு இறப்பு என்னும் சக்கரத்தில் சிக்கித் தாங்கள் முற் பிறவியில் செய்த பாவ புண்ணியங்களுக்கு ஏற்பப் பிறந்தும் இறந்தும் உழல்கின்றன என்னும் இந்தக் கருத்தின் அடிப்படையில்தான் இந்து சமயத்தின் புகழ் பெற்ற 'கர்மமும் அதுபற்றிய விதிகளும்', 'மறுபிறப்புக் கொள்கையும்' தோன்றியுள்ளன.

ஜீவாத்மா பலநூறு பிறப்புக்களை எடுத்து எடுத்து உழலும்போது ஒவ்வொரு பிறவியிலும் அதன் உடம்பும் மனமும் மட்டுமே கர்மங்களுக்கு ஏற்றவாறு உயர்ந்த நிலையையும் தாழ்ந்த நிலையையும் அடைகின்றன. ஆனல் அவற்றினுள் இயங்கும் ஆத்மா மட்டும் எந்தவித மாறுதலும் அடையாமல், உடலும் மனமும் மேலும் மேலும் அடைகிற தூய்மைக்கும் சிறப்புக்கும் ஏற்பத் தன் பெருமையை வெளிப்படுத்துகிறது.*

### இது எப்போது துவங்கியது?

'இப்படி உலகமும் உலக உயிர்களும் ஓயாமல் பிறந்தும் இறந்தும் சுற்றிக்கொண்டிருக்கும் இந்தச் சுழற்சி எப்போது ஏன் துவங்கியது?' என்பதும், 'கடவுளின் அம்சமாகவும், எந்தக் காலத்திலும் அழியாமலும் மாருமலும் இருக்கும் இந்த ஜீவாத்மா எப்போது முதல்முதலில் இந்தக் கர்மவிதிகளில் சிக்கிக்கொண்டது?' என்பதும் கீதையில் விளக்கப் படவில்லை.

மாறிக்கொண்டே இருக்கும் பிரகிருதியின் வடிவமான இந்த உலகமும் உடம்புகளும், என்றும் மாருமல், நிலையாக இருக்கும் ஜீவாத்மாவும் பரம் பொருளான கடவுளின் கீழான, மேலான இரண்டு சுபாவங்கள் என்று கொள்ளப்பட்டுவிட்டதால், இந்தக் கேள்விக்கே இடம் இல்லாமற் போகிறது.

* கீதை, அத்தியாயம், 2, 20, 22.

தன்னுடைய இத்தகைய தோற்றத்தைப் பற்றித் தெளிவாக அறிந்து கொள்ளாமல், அது பற்றிய சந்தேகங்களால் அலைக்கழிக்கப்படுகிற மனிதனுக்குக் கீதை அந்தச் சந்தேகம் அவனுடைய அறியாமையின் விளைவு என்று கூறுகிறது.*

இந்த அறியாமையினல்தான் அவன் அழியாத ஆத்மாவாகிய தன்னை அழிந்துபோகிற உடலோடு சேர்த்து, அதுதான் 'தான்' என்று நினைக்கிருன். இப்படி ஒவ்வொரு மனிதரையும், 'தான் யார்? 'தன் தோற்றம் என்ன?' என்பதை அறிந்துகொள்ள முடியாத அறிவிலியாக ஆக்கிவிடுவது அறியாமையின்—மாயையின்—இயல்பாகும்.

எனவே இந்த அறியாமையிலிருந்து விடுபட வழி தேடும் மனிதனைக் கீதை, முறையான ஆன்மிகப் பயிற்சிகளைக் கடைப்பிடிக்குமாறு கூறுகிறது. அந்தப் பயிற்சிகளின் மூலம் அறியாமையிலிருந்தும் பிரகிருதியின் பிடியிலிருந்தும் விடுபடுமாறு கூறுகிறது.*

### மூன்றும் ஒன்றும்

உலகிலுள்ள இயற்கைப் பொருள்களும் உடம்புகளும் கடவுளின் கீழான சுபாவம் என்றும், ஜீவாத்மா அவனுடைய மேலான சுபாவம் என்றும் கீதை கூறுகிறது. இதோடு இந்த இரண்டு கருத்துக்களும் மாறுபடுவது போல், இவற்றில் பரம் பொருளான இறைவன் நீக்கமற நிறைந்து, இவற்றை உருவாக்கிக்கொண்டும், கட்டுப்படுத்திக் கொண்டும் இவற்றுக்கு வழிகாட்டிக்கொண்டும் இருக்கிருன் என்றும் கூறுகிறது.*

இத்தகைய விளக்கம் இயல்பாகவே இறைவனின் கீழான சுபாவமான பிரகிருதி, மேலான சுபாவமான ஜீவாத்மா, இவற்றுக்கு ஆதாரமாகவும் அடிப்படையாகவும் இருக்கும் புருஷோத்தமனுகிய பகவான் ஆகிய மூன்றுக்கும் இடையில் அமைந்த உறவு பற்றிய கேள்வியை எழுப்புகிறது.

* கீதை 5, 15.

* கீதை 15, 1-5.

* கீதை 15, 16-19,

எல்லாமே பகவானிடம் இணைந்திருக்கிறது என்னும் கீதையின் இணைப்புக் கொள்கைப்படி, எல்லாமே வாசுதேவனாகிய பகவான் என்ற அதன் காட்சியின்படி, பிரகிருதி பரம்பொருளான பகவானின் பொய்த் தோற்றம் என்றும், ஜீவாத்மா அவனுடைய உண்மையான தோற்றம் என்னும் கொள்ளலாம்.

சாதாரணத் தர்க்கக் கண் கொண்டு பார்த்தால் கீதையின் இந்த இரண்டு வகையான விளக்கம் ஒன்றுக்கொன்று முரணானது போல் தோன்றும். ஆனால் எல்லாவற்றையும் கடவுளோடு இணைத்து அவரையே எல்லாவற்றுக்கும் மையமாக்கும் கீதையின் உபதேசங்கள், 'பிரகிருதி என்பது பகவானிடமிருந்து பிரிந்து தனியாக விளங்கும் ஒன்று' என்னும் கொள்கையை ஏற்றுக்கொள்ளவில்லை.

'உலகங்கள் அனைத்தையும் தழுவி, உலகங்களாகவே விளங்கும் பகவானாகிய புருஷோத்தமனுடைய கண்ணுக்குத் தெரியும் வெளிப்பாடே இந்தப் பிரகிருதி. ஆனால், பகவான் தன்னிடமிருந்து வெளிப்படும் இந்தப் பிரகிருதியாலும், அதன் செயல்களாலும் ஒருசிறிதும் பாதிக்கப்படுவதில்லை' என்று கீதையின் உபதேசங்கள் கூறுகின்றன.*

**மாயையும் கீதையும்**

கீதையில் இந்த உலகம் என்பது மாயையே, பகவானின் வெறும் பொய்த் தோற்றமே என்று கூறும் உபதேசங்களும் உள்ளன. இந்த உபதேசங்களின் அடிப்படையில்தான் தர்க்கரீதியாக, பரம்பொருளான பகவானுக்கும் அவரிலிருந்து தோன்றிய உலகத்திற்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை என்பதைத் தெளிவாக விளக்கிக் காட்ட முடியும்.

ஆனால் கீதை ஒரு பக்திமயமான நூலாகவும், பக்தி வழியாகவே மனிதர்கள் கடவுளை அடைவதற்கான வழிகளைக் கூறும் நூலாகவும் இருப்பதாலும், சாதாரண மனிதர்கள் கடவுளை அடைவதற்கு மாயைத் தத்துவவழி பயன்படக் கூடியது அல்ல என்பதாலும் அந்தத் தத்துவத்தை விரிவாகக் கூறவில்லை.

ஆனால், வாழ்க்கையின் அன்றாடப் பிரச்னைகளில் சிக்கி அலைந்துகொண்டு, அதே நேரத்தில் அந்த வாழ்க்கையிலிருந்து விடுபட்டுக் கடவுளை அடைய வழிதேடும் மனிதர்களுக்கு உலகம் மாயை என்பது அனுபவத்தில் தெளிவாக உணரக்கூடிய ஓர் உண்மையாகும். இந்த உண்மையைப் பொய் என்று யாரும் மறுத்துவிட முடியாது.

ஆனாலும் கீதை தன்னுடைய முக்கியமான உபதேசங்களில், "இந்த உலகம் மாயை; ஒரு பொய்த் தோற்றம். இதற்கும் பகவானுக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை" என்ற இந்தக் கொள்கையை விலக்கிவிட்டு, "உலகமும் அதில் உள்ள ஒவ்வொரு பொருளும் எவ்வாறு பரம்பொருளோடு இணைந்து இருக்கின்றன" என்பதைக் கூறுவதிலேயே தன் கவனம் முழுவதையும் செலுத்துகிறது.

இந்த உலகிலுள்ள உயிரில்லாத பொருள்களான மலை, ஆறு, கடல், மரம் முதலியவை பகவானின் கீழான தோற்றமாகவும், (Lower Nature), உடம்பும் உயிரும் உள்ளவையான மனிதன், விலங்கு, புழு, பூச்சிகள், தேவர், முனிவர்கள் அனைத்தும் பகவானின் உயர்ந்த தோற்றமாகவும் (Higher Nature) எவ்வாறு அமைந்திருக்கின்றன என்பதைப் பகவான் தம்முடைய விசுவரூப தரிசனத்தின் மூலமாக, உலகம் முழுவதிலும், உலகில் உள்ள ஒவ்வொரு பொருளும் உயிரும் தானாகவும், அவை தன்னிலுமாக இருக்கும் நிலையை மிகப் பெரிய வடிவத்தின் மூலம் காட்டுகிறார்.

இந்தத் தோற்றத்தை அர்ஜுனன் பகவான் தந்த தெய்விக ஆற்றல்மூலம் தெளிவாகக் காண்கிறான்.

* கீதை 10, 5, 7, 12.

ராமநாமம் உலகத்திலுள்ள எல்லா ஆசையின் வேரையும் அழிக்க வல்லது.
ராமநாமம் என்ற ரசம் அமிர்தம் போன்று இனிமையானது.
ராமநாமம் துர்ஜனங்களின் சேர்க்கையை அறுக்க வல்லது
ராமநாமத்தை ஹனுமான் துதிக்காமல் இருப்பதில்லை.
ராமநாமத்திற்கு ஈடான புண்ணியமே இல்லை.
ராமநாம மகிமையை வர்ணிக்க வார்த்தைகளே இல்லை.



# வேட வடிவம்

வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன்



ஒரு சமயம் அருச்சுனன் தவம் செய்து கொண்டிருந்தான். அப்போது ஓர் அசுரன் பன்றிவேடம் பூண்டு அவன் தவத்தைக் கலைக்க முயன்றான். சிவபெருமானும் இறைவியும் வேடுவன் வேடுவச்சி போலக் கோலம் பூண்டு அங்கே வந்தார்கள். அருச்சுனன் அந்தப் பன்றியை அம்பினால் எய்தான். அதே சமயத்தில் சிவபெருமானும் அதை எய்தான். ஒரே விலங்கின் மேல் இருவரும் எய்தபோது அந்த இருவர்களுக்குள்ளும் பூசல் ஏற்பட்டது. ''நான் எய்த ஒரு விலங்கை நீர் எப்படி எய்யலாம்?'' என்று அருச்சுனன் கேட்டான். ''நான்தான் முதலில் எய்தேன்'' என்று சிவபெருமானாகிய வேடன் சொன்னான். இதனால்தான் இருவருக்கிடையிலும் சண்டை மூண்டது. இருவரும் போரிட்டார்கள். அப்பொழுது அருச்சுனன் தன் வில்லால் இறைவனை அடித்தான். இறைவன் வேட உருவம் மாறித் தன் இயற்கையான கோலத்தைக் காட்டி, அருச்சுனனுக்கு அருள்செய்தான்.

இந்தக் கதை பாரதத்தில் வருகின்றது; வடமொழியில் இறைவன் செய்த இந்தத் திருவிளையாடலைப் பற்றி, 'கிராதார்ஜுனீயம்' என்று ஒரு காவியமே இருக்கின்றது. காரைக்கால் அம்மையார் இந்தத் திருவிளையாடலை எண்ணிப் பார்க்கின்றார். வேடனாகக் கோலம் பூண்ட சிவபெருமான் எப்படிக் காட்சியளித்திருப்பான்? அந்த வடிவத்திற்கு எதை உவமை கூறுவது? அந்தக் காலத்தில் உடன் இருந்து பார்த்தவர்கள் யாரும் இப்பொழுது இல்லையே. இறைவனுடைய உண்மையான வடிவு இத்தகையது என்று சொல்ல முடியாதது போல இந்த வேட்டுவக் கோலத்தையும் எவ்வாறு இருக்கும் என்று யாரும் சொல்ல முடியாது. காரணம், அது பண்டைப் பழங்காலத்தில் நிகழ்ந்தமையே. இதைப்பற்றிக் காரைக்கால் அம்மையார் சிந்திக்கின்றார்.

அந்தப் பழங்காலத்தில் வில்லை ஏந்திய வேடத்தை உடையவனாகி இறைவன் விஜயனுடன் போரிட்டான். அந்த வடிவம் அவனாக வலிந்து மேற்கொண்ட வடிவம். அருச்சுனன் அவ்வாறு வர வேண்டும் என்று பிரார்த்திக்கவில்லை. வேறு யாரும் அவ்வாறு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளவில்லை. இறைவனே விஜயனிடம் உள்ள கருணையினால் அந்தத் திருவிளையாடலை நிகழ்த்தினான். தன்னுடைய குழந்தையுடன் சண்டை போடுவது போலத் தந்தை விளையாடி, அந்தக் குழந்தையின் கையால் அடிபடுகின்றான். அதனால் தந்தைக்குக் கோபம் வருமா? அவன் வேண்டுமென்றே அப்படி விளையாடி அடிபட்டான். அதனால் தந்தைக்கு இன்பம் உண்டாகுமேயொழிய கோபம் உண்டாகாது. அதுபோல இறைவனுக்கு இந்தத் திருவிளையாடலால் இன்பமே உண்டாயிற்று. அதனால் இறைவன் அருச்சுனனுக்கு அருள்புரிந்தான்.

'பண்டைக் காலத்தில் வில்லையுடைய வேடனாகி விஜயனுடன் போரிட்டான் இறைவன். அப்பொழுது அந்த வேடத்தை மேற்கொண்ட இறைவன் எத்தகைய வடிவுடன் இருந்தான்?' இப்படி அம்மையார் சிந்திக்கின்றார். அந்தக் கோலத்துக்கு வேறு யாரை உவமை சொல்ல முடியும்? எந்தப் பொருளை ஒப்பாகச் சொல்ல முடியும்? எண்ணி எண்ணிப் பார்க்கின்றார்; கற்பனையை விரித்துப் பார்க்கின்றார்; ஊகித்துப் பார்க்கின்றார்.

—பூதப்பால்

வில் வேடன் ஆகி விசயனோடு ஏற்ற நாள்
வல்வேடன் ஆன வடிவு.

அந்த வடிவுக்கு எதை உவமை சொல்வது? எந்த வடிவம் அதனை ஒக்கும்? எந்த வடிவம் அதற்கு ஒவ்வாது? ஒவ்வொன்றாக அம்மையார் நினைத்துப் பார்க்கின்றார். எதுவும் சரிப்பட்டு வரவில்லை.

ஏது ஒக்கும்? ஏது ஒவ்வாது?

மறுபடியும் சிந்தித்துப் பார்க்கின்றார். எந்த வடிவத்தைச் சொல்லலாகும் என்று யோசிக்கின்றார். சிலவற்றை எண்ணும்போது அவற்றைச் சொல்லலாகாது என்று தோன்றுகின்றது. இப்படி எண்ணி எண்ணித் தடுமாறுகின்றார்.

ஏது ஆகும்? ஏது ஆகாது?

இறைவன் தனக்கு உவமை இல்லாதவன். மிகவும் நுட்பமாக உள்ள அவனைச் சுட்டிக் காட்ட முடியாது. எந்த அளவையாலும் அளந்துவிட முடியாது. ஆதலால் அவனுக்கு 'அப்பிரமேயன்' என்று பெயர் வந்தது. உபமானம் சொல்ல முடியாமையால் 'அநுபமன்' என்று திருநாமமும் வந்தது. ஆனால் வடிவு கொண்டபொழுது அதை

யாவது இப்படி இருக்கும் என்று உவமை சொல்லிப் பார்க்கலாம் என்றுலோ, அதுவும் இயலாத காரியம் என்று தோன்றுகிறது. கண்ணிலே கண்ட உருவத்துக்கு ஒருவாறு உவமை சொல்லி விடலாம். ஆனுல் வேடனுகக் கோலம் பூண்ட போது எடுத்த வடிவத்திற்கு உவமை சொல்ல வேண்டுமானுல் அதைப் பார்த்தவரால்தான் சொல்ல முடியும். அந்தத் திருவிளையாடலில் நிகழ்ந்த காலம் மிகமிகப் பழமையானது. அதை இப்பொழுது எண்ணிப் பார்த்தால் இப்படி இருக்கலாம் என்று ஊகித்துச் சொல்ல முடியாத திண்டாட்டம் ஏற்படுகின்றது. உலகில் உள்ள பொருள்களை உவமானம் சொல்லலாம் என்ருல் அவை யாவும் அவனை நோக்கத் தாழ்ந்தவை. உயர்ந்த பொருளுக்குத் தாழ்ந்த பொருளை உவமானம் சொல்லலாகாது. மிக உயர்ந்த பரம்பொருளாகிய அவனுக்கு உவமானம் சொல்வது என்பது முடிகிற காரியமா? ஆகவேதான், அம்மையாரின் உள்ளம் திட்டவட்டமாக இதுதான் ஒப்பு, இதுதான் சொல்லலாகும் என்று தெரியாமல் குழம்புகின்றது.

ஏது ஒக்கும்? ஏது ஒவ்வாது? ஏது ஆகும்? ஏது ஆகாது?

என்று திருப்பித் திருப்பிச் சொல்கின்ருர். கடைசியில் உவமை கூறுவதோ, இப்படிச் சொல்லலாம் என்று தீர்மானம் செய்வதோ யாராலும் முடியாது என்ற முடிவிற்கு வருகின்ருர்.

ஏது ஒக்கும் என்பதனை யார் அறிவார்?

இவ்வாறு தடுமாறிய தடுமாற்றத்தை அம்மையார் ஒரு பாட்டினைப் பாடுகின்ருர்.

ஏது ஒக்கும்? ஏது ஒவ்வாது? ஏது ஆகும்? ஏது ஆகாது?
ஏது ஒக்கும் என்பதனை யார் அறிவார்? பூதப்பால்
வில்வேடன் ஆகி விசயனேடு ஏற்றநாள்
வல்வேடன் ஆன வடிவு.

பழங்காலத்தில் வில்லைக் கையில் ஏந்திய வேடனுக வந்து விசயனேடு எதிர்த்துப் போரிட்ட காலத்தில், வலிமையை உடைய வேடத்தை உடையவனுன அந்த இறைவன் வடிவத்திற்கு எது ஒப்பாகும்; எது ஒவ்வாது? எது சொல்லத்தகும்! எது சொல்லத் தகாது? எது உவமானம் ஆகும் என்பதனை யார் அறிவார்கள்.

பூதம்—இறந்த காலம்; பண்டைக் காலம். வில்வேடன்—வில்லை உடைய வேட்டுவன். விசயன்—அருச்சுனன். ஏற்ற—எதிரிட்டுப் போர் செய்த. வல் வேடன்—வலிமை உள்ள வேடம் பூண்டவன்; வேடன்—வேடத்தை உடையவன்.

'வடிவு ஏது ஒக்கும் என்பதனை யார் அறிவார்?'

அற்புதத் திருவந்தாதியில் 62—ஆவது பாடல் இது. ✡

---

## லாகூரில் விவேகானந்தர்



சுவாமி விவேகானந்தர் 1897-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் லாகூருக்கு வந்தார். அவரை எனக்கு ஏற்கனவே தெரியும். இருவரும் கல்லூரியில் ஒன்ருகப் படித்தோம். பிறகு ஒன்று அல்லது இரண்டு முறை சந்தித்திருக்கிருேம்.

விவேகானந்தர் லாகூரில் இருந்த நாட்களில் என் வீட்டிலேயே தங்கியிருந்தார். அவருடன் இரண்டு சீடர்கள் வந்திருந்தனர். பகல் நேரங்களில் என் வேலைமுடிந்து ஓய்வு கிடைத்தபோதும், இரவு நேரங்களில் நெடுநேரமும் இருவரும் உரையாடுவோம். கல்லூரியில் மிகவும் சாதாரணமாகவும் அமைதியாகவும் இருந்த விவேகானந்தர், எவ்வாறு உலகப்புகழ் பெற்ற பெரியவராகவும், சிறந்த வாக்குவன்மை உள்ளவராகவும், தம் சக்தியினுல் பிறரைக் கவரும் தன்மையுள்ளவராகவும் ஆனுர் என்பதை நான் நினைத்து வியந்ததுண்டு.

அவரது உற்சாகத்துக்கு எல்லையே இல்லை. அவருடைய அபரிமிதமான தேசபக்தியை அள்ளிப் பருகினேன். ஜப்பானியர்களைப்பற்றிப் பேசும் போது அவரது தேசபக்தி சுடர்விட்டெரியும். "நான் சிறை செல்வதால் தேசத்துக்கு நன்மை உண்டாகுமானுல் சிறைக்குச் செல்லவும் தயார்" என்று கூறினுர் சுவாமி விவேகானந்தர்.

—நகேந்திரநாத் குப்தா
Reflections and Reminiscences, பக்கம் – 197

# சுவாமி பிரேமானந்தரின் போதனைகள்

பக்தருக்கு: மனம் தளராமல் தொடர்ந்து தியானம் பழகி வா. அப்போது திரிசல்களிலிருந்து மனதை விடுவிப்பதில் நீ வெற்றி காண்பாய். கடவுளிடம் மனதை வைப்பவன் அவருடைய அருளைப் பெறுகிறான்; அந்தத் திருவருளின் மூலம் தியானத்தில் ஆழ்கிறான். அவருடைய அருளால் நல்லோரிணக்கம் கிட்டுகிறது; அவனுடைய மனம் தூய்மை பெறுகிறது. நல்லறிவு தானாகவே உதிக்கிறது. அந்த நிலையில் மனமே குருவாக அமைந்து உன்னை நேர் வழியில் அழைத்துச் செல்லும்.

கடவுளிடம் நம்பிக்கை உள்ளவர்களுக்குச் சில சமயங்களில் காமமும் கோபமும் உண்டானபோதிலும் அவை அவர்களுக்குத் தீங்கு செய்யமாட்டா. நீங்கள் கடவுளின் வேலைக்காரர்கள், உலக நாதனாகிய சிவபெருமானின் குழந்தைகள். காமனை எரித்தவனுடைய குழந்தைகள் என்று உங்களை நினைத்துக்கொள்ளுங்கள். அப்போது காமம் உங்களைத் தாக்காது.

இதயமாகிய கோவிலில் தியானம் செய். உனக்கு விருப்பமான வடிவத்தில் கடவுளை நீ வழிபடலாம். மனதின் திரிசலை அடக்குவதில் விடாமுயற்சியுடன் போராடு. கடவுள் தியானத்தைத் தொடர்ந்து பழகினால் உன் மனதில் இன்பமும் இனிமையும் எழுவதைக் காண்பாய். பிறகு கடவுளை நினைக்காமல் உன்னால் இருக்க முடியாது. உனக்குப் பக்தியும் சிரத்தையும் வளரட்டும் என்று நான் பிரார்த்தித்துக் கொள்ளுகிறேன். பகவான் உன்னை எப்பொழுதும் காப்பாற்றி வருவாராக.

ஒரு துறவிக்கு: உன் மனதை ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் செலுத்து. அவருக்கு உன்னைச் சமர்ப்பணம் செய். அவருடைய பணியைச் செய்து வா. உன் செயல்களின் பயனை அனுபவிக்க விருப்பம் கொள்ளாதே! அதுதான் பகவானின் உபதேசம் ஆகும். அப்படி இருந்தால் உள்ளம் தூய்மையடையும். பகவானின் திருவருளால்தான் ஒருவனுக்கு நல்லறிவு உதிக்கும்.

கடவுளைப் பற்றிய தத்துவத்தை உபதேசிக்கச் சொற்பொழிவுகள் உதவி புரிய மாட்டா. அதை வாழ்ந்து காட்டு. முன்மாதிரியான வாழ்க்கை நடத்தினால் மக்கள் உன்னைப் பின்பற்றுவார்கள்.

மதத்தில் கட்சிகளும் பிணக்குகளும் இந்த உலகில் எப்போதுமே இருந்திருக்கின்றன; இனி மேலும் இருக்கும். கடவுளின் திருவருளால்தான் அவை மனிதனுடைய உள்ளத்திலிருந்து அகல வேண்டும். உன்னத லட்சியத்துடன் உத்தம வாழ்க்கை வாழ்பவர்கள் உலகில் எத்தனை பேர் இருக்கிறார்கள்? வாழ்க்கையில் உயர்வும், உள்ளத்தில் பரந்த நோக்கமும், கள்ளங்கபடற்ற தன்மையும் பல பிறவிகளில் செய்த தவத்தாலும் கடவுளின் அருளாலுமே ஒருவனுக்கு வாய்க்கும்.

உனக்கு ஞானமும் பக்தியும் சித்திக்கட்டும். ஆனந்தக் கடலில் நீ ஆழ முழுகு. பகவானின் இந்த லீலாபூமியில் நாமும் ஏதோ ஒரு விளையாட்டில் கலந்துகொண்டு மகிழ்வோம். அனைவரிடமும் அன்பு செலுத்தி, இந்த உலகம் முழுவதையுமே உனக்குச் சொந்தமாக்கிக்கொள். அன்னியன் என்றோ, ஆகாதவன் என்றோ உனக்கு எவனும் இருக்க வேண்டாம். கர்வத்துக்கும் அகங்காரத்துக்கும் நம்மிடம் இடமே இருக்கக்கூடாது. உலகம் முழுவதும் ஒரு குடும்பமாக ஒன்றுபடட்டும். அப்படிப்பட்ட அன்புதான் உண்மை; மற்றதெல்லாம் ஓடி மறையும் பொய்யே ஆகும்.

பக்திவாய்ந்த ஒரு பெண்ணுக்கு மிஸ் எம்க்லாட் என்னும் மேலைநாட்டுப் பெண்மணியை நீ பார்த்திருந்தால் அவருக்கு எவ்வளவு கடவுள் பக்தியும் சிரத்தையும் இருந்தன என்பதைக் கண்டிருப்பாய். இறைவனின் பணியைச் செய்ய ஒவ்வொரு காலத்திலும் அவளைப் போன்ற பக்தர்கள் தோன்றுகிறார்கள். அவள் எங்களுடன் ஆன்மிகத்தில் ஒன்றாகிவிட்டாள்.

தூய்மை, கபடமின்மை, ஆழ்ந்தபக்தி ஆகிய வற்றினால்தான் ஒருவன் கடவுளை அடைகிறான்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்களை நாள்தோறும் படி. அது பாகவதமும் கீதையையும் பாராயணம் செய்வது போன்றதே ஆகும். அதோடு சுவாமி விவேகானந்தரின் கடிதங்களையும் சொற்பொழிவு களையும் படி. படிப்பவர்கள் அனைவரின் உள்ளத்தி லும் ஞானவிளக்கை ஏற்றும் சக்தி அவற்றில் நிறைந்திருக்கிறது.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் அவதரித்த நாள் முதற்கொண்டு ஒரு புதிய யுகம் ஆரம்பித்திருக் கிறது. எல்லோரும் சமாதானத்திற்கு வழி காணட்டும். அவருடைய வழியில் நடப்பவர் களின் வாழ்க்கையில் ஆனந்தம் நிறைந்திருக்கும். உலக மக்கள் அனைவரையும் நாம் நம்மவர் களாக்கிக் கொள்ள வேண்டும். எவரும் அன்னிய ராகவோ விலகியவராகவோ இருக்கவேண்டாம். நம்மிடமிருந்து விலகியதாக ஒன்று இருக்கவேண்டு மானல் அது ''நான்'', 'என்னை', 'என்னுடையது' என்பதே ஆகும். 'என்னை' 'என்னுடையது' என்ற மனப்பான்மைதான் பகைவர்களிலும் மிகப் பெரிய பகைவனாக இருக்கிறது. இந்தப் பகைவனை அழித்து நசுக்க வேண்டும். சுயநல ஆசைகள் எல்லாவற்றையும் கொல்ல வேண்டும். அதன் பிறகுதான் உலகம் முழுவதும் நமக்குச் சொந்த மாகும். அதன் பிறகுதான் இந்த உலகம் கடவுளைச் சார்ந்தது என்பதை நாம் காண்போம். அதன் பிறகுதான் பூமியில் சமாதானமும் இன்பமும் நிலவும்.

எவன் முழு அளவில் அகங்காரம் இல்லாமல் இருக்கிறானோ அவன்தான் மனித சமூகத்தின் ஆசான். ஒருவனுக்குப் பகவானுடைய திருநாமத் தில் நம்பிக்கை உதிக்குமானல் அவருடைய சக்தி யால் அவனிடமிருந்த மதிமயக்கம் அழிந்துபோகும். இறைவனின் சக்தியால் ஆகாத காரியம் எதுவும் இல்லை. அவர் தமது கிருபையால் நம் கண்களை மறைக்கும் அஞ்ஞானத்தை நீக்கி அருள்வாராக. ☆

---

## உயர்ந்த உள்ளம்

கல்கத்தாவில் போர்ட் வில்லியம் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றிய ஈசுவரசுந்திர வித்தியாசாகரருக்கு மாதச் சம்பளம் ஐம்பது ரூபாய். அதில் மாதந்தோறும் தமது தந்தைக்கு இருபது ரூபாய் அனுப்பி வந்தார். மீதி முப்பது ரூபாயில் தமது சகோதரர், ஐந்து உறவினர்கள், ஒரு வேலையாள் முதலியவர் களோடு வாழ்க்கை நடத்தி விருந்தோம்பியும் வந்தார் சமையல்காரர் கிடையாது. எல்லோரும்—அவர் உட்பட—முறை போட்டுச் சமையல் செய்தனர்.

இவ்வளவு கஷ்ட நிலையில் இருந்தபொழுது, அதே கல்லூரியில் இலக்கண ஆசிரியர் பதவி காலியாயிற்று. டாக்டர் மொவாட் என்னும் ஆசிரியர், கல்லூரி முதல்வர் மார்ஷல் என்பவரின் சம்மதத்தோடு அந்த உயர்பதவியை வித்தியா சாகரருக்கு வழங்கினர். ஆனல் வித்தியாசாகர் அந்தப்பதவியைப் பண்டித தாரகநாத் தர்க்கவாசஸ்பதிக்குக் கொடுப்பதாகத் தாம் ஏற்கனவே வாக்களித் திருப்பதாகவும், எனவே தாம் ஏற்றுக்கொள்ள இயலாது என்றும் மறுத்து விட்டார்.



பண்டித தாரகநாத் கல்கத்தாவிலிருந்து ஐம்பது மைல் தூரத்திலுள்ள குல்னு என்னும் ஊரில் வசித்து வந்தார். அப்பொழுது சனிக்கிழமை பிற்பகல். திங்கட்கிழமை காலையில் மனுக்கொடுத்தால்தான் வேலை கிடைக்கக் கூடும். அந்த நாளில் ரெயில் வசதியோ, தந்தி வசதியோ கிடையாது. தபால்களை நினைத்தபொழுதுதான் எடுத்துச் செல்வார்கள். அதை நம்பவே முடியாது. என்ன செய்வதென்றும் மனம் குழம்பினர் வித்தியாசாகரர்.

அன்றிரவே வித்தியாசாகரர் கால் நடையாகச் சென்று, திங்கட்கிழமை காலையில் மனுவுடனும், தாரகநாத்தின் பெற்றோர்களின் ஆசியுடனும் வந்து சேர்ந்தார். அந்தப் பதவிக்குத் தாரகநாத் நியமனம் பெற்ற செய்தியை அறிந் ததும் அவரது மனம் மகிழ்ச்சிக்கடலில் திளைத்தது.

—ஏ. என். ராய்

வித்தியாசாகரர் (1922) பக்கம்24-25



# வைகுண்டத்திற்கு வழி

ஜனஸ்தானம் என்று அழைக்கப்பட்ட பிரதேசத்தில் ஜடன் என்ற ஓர் அந்தணன் இருந்தான். இவன் தன் குலத்தொழிலை ஒதுக்கித் தள்ளி, வைசியத் தொழிலை மேற்கொண்டான். அத்துடன் பல ஸ்திரீகளுடன் சல்லாபம் செய்தல், மது அருந்துதல், சூதாடுதல், வேட்டையாடுதல், முதலிய பல கெட்ட குணங்களும் அவனிடம் இருந்தன.

இவை காரணமாக, அவனிடம் இருந்த பொருள் எல்லாம் நஷ்டமாயின. எனவே, அவன் வியாபாரம் செய்வதற்காக வடக்கே வெகுதூரம் சென்றான். அவன் வியாபாரம் செய்து நிறைய பொருள் சம்பாதித்தான். பிறகு அதை எடுத்துக்கொண்டு ஊர் திரும்புகையில் ஒருநாள் இருட்டானதனால் ஒரு மரத்தினடியில் தங்கினான். அப்பொழுது சில திருடர்கள் அங்கே தோன்றி, அவனை அடித்துக் கொன்று, அவனது பொருள்களைப் பறித்துக் கொண்டு போய்விட்டார்கள். ஜடன் மிகவும் பாவியாதலால் உடனே பிரேதமாக மாறினான்.

அவனுடைய மகன் மிகவும் நல்லவன்; வேதங்களைக் கற்று ஓதியவன். வெளியூர் சென்ற தகப்பனார் வெகுகாலம் திரும்பி வராமற் போகவே, அவரைத் தேடிக்கொண்டு அவன் வீட்டை விட்டுப் புறப்பட்டான். பலரை விசாரித்தும், தகப்பனாரைப் பற்றிய தகவல் கிடைக்கவில்லை. கடைசியில் ஒரு நாள், தகப்பனாரின் உதவியாள் ஒருவரைச் சந்திக்க அவன் நடந்த விஷயங்களைச் சொன்னான்.

தகப்பனார் மரணம் அடைந்து விட்டதைக் கேட்டு, மகன் மிகவும் வருந்தினான். தகப்பனாரின் இறுதிக் கடன்களைக் காசிக்குச் சென்று செய்யத் தீர்மானித்து, காசியை நோக்கிக் கிளம்பினான். எட்டு நாட்கள் பிரயாணம் செய்து கடைசியில் ஒன்பதாவது நாள், எந்த மரத்தடிக்குக் கீழே தகப்பனார் கொல்லப்பட்டாரோ அந்த மரத்தடிக்கு வந்து சேர்ந்தான்.

அங்கு அவன் சந்தியாவந்தனத்தை முடித்துக் கொண்டு, வழக்கம் போல் கீதையின் மூன்றாவது அத்தியாயத்தைப் பாராயணம் செய்தான்.

அப்பொழுது, ''ஹோ'' என்ற இரைச்சல் கேட்டு நிமிர்ந்து பார்த்தான். ஆகாயத்தில் அவனுடைய தகப்பனார் பயங்கரமான பிரேத உருக்கொண்டு நிற்பதைப் பார்த்து நடுங்கினான்.

ஆனால் அடுத்த கணமே அந்தப் பிரேத உரு மறைந்தது. அந்த இடத்தில் ஓர் அழகிய தேவ லோக விமானம் இருப்பதையும், அதில் தன் தகப்பனார், பீதாம்பரம் தரித்து, அழகிய உருவுடன் வந்திருப்பதையும், அவரைச் சுற்றிப் பல முனிவர்கள் அவரைத் துதித்துக் கொண்டிருப்பதையும் பார்த்தான்.

அப்பொழுது விமானத்தில் இருந்த தகப்பனார், பிள்ளையைப் பார்த்து, ''நான் செய்த பாவத்தின் பயனாக நான் பயங்கரப் பிரேதமாக மாறி அவதிப் பட்டேன். நல்ல வேளை; நீ வந்து கீதையின் மூன்றாவது அத்தியாயத்தை ஓதியதனால், என் பாவங்கள் சுட்டெரிக்கப்பட, நான் இப்பொழுது வைகுண்டம் சென்று கொண்டிருக்கிறேன்'' என்று சொன்னார்.

மகன் தகப்பனாரை வணங்கி, ''நான் செய்யக் கூடிய காரியம் ஏதாவது இருந்தால் சொல்லுங்கள், செய்கிறேன்'' என்றான்.

அதற்குத் தகப்பனார், ''நான் பாவம் செய்தது போலவே, என் அண்ணனும் பாவம் செய்து இப்பொழுது நரகத்தில் உழன்று கொண்டிருக்கிறான். அதைப்போல நம் மூதாதையர் எத்தனையோ பேர் நரகத்தில் உழன்றுகொண்டிருக்கின்றனர். ஆகவே நீ இப்பொழுது ஓதியதைப் போல, கீதையின் மூன்றாவது அத்தியாயத்தை ஓது. அந்தப் புண்ணியம், நரகத்தில் உள்ளவர்களைக் கடைத் தேற்ற வேண்டும் என்று சங்கல்பம் செய்து கொண்டு, கீதையின் மூன்றாவது அத்தியாயத்தை ஓது'' என்று சொல்லிவிட்டு மகனை ஆசிர்வதித்து விட்டு மறைந்தார்.

ஊர் திரும்பிய மகன் அங்கிருந்த ஓர் அழகிய கிருஷ்ணன் கோவிலுக்குள் நுழைந்து, கிருஷ்ண விக்கிரகத்துக்கு முன்னால் உட்கார்ந்துகொண்டு, நரகத்திலுள்ள எல்லோரும் நற்கதி அடைய

வேண்டும் என்று நினைத்துக்கொண்டு கீதையின் மூன்றுவது அத்தியாயத்தை ஓதினன்.

அவன் ஓதி முடித்ததுதான் தாமதம், விஷ்ணு தூதர் ஒருவர் யமனைப் பார்க்க வந்து சேர்ந்தார். யமன் அவரை உபசரித்து, "தாங்கள் என்னைத் தேடி வந்த காரணம் என்ன?" என்று கேட்டார்.

அதற்கு விஷ்ணுதூதர், "தாங்கள் சௌக்கியமா? என்று விஷ்ணு தங்களை விசாரிக்கச் சொன்னர். அதோடு, நரகத்தில் உழன்று கொண்டிருக்கும் எல்லாப் பிராணிகளையும் உடனே விடுதலை செய்ய வேண்டும் என்று சொல்லும்படியும் சொன்னர்" என்றர்.

"அப்படியே செய்கிறேன்" என்று கூறி, யமன் நரகத்தில் இருந்த எல்லோருக்கும் விடுதலை அளிக்க, அவர்கள் எல்லோரும் வைகுண்டம் போய்ச் சேர்ந்தார்கள்.

"கீதையின் மூன்றுவது அத்தியாயத்தின் மகிமையே மகிமை!" என்று அவர்கள் வியந்து கொண்டே சென்றர்கள். அதை ஓதிய அந்தண குமாரனும் காலமான பின் வைகுண்டம் போய்ச் சேர்ந்தான்.

## வேடனும் நரசிங்கமும்

ஆதிசங்கரரின் முக்கியச் சீடராக விளங்கியவர் பத்மபாதர். ஸனந்தனர் என்னும் பெயர் கொண்ட அவருக்குப் பத்மபாதர் என்ற பெயர் ஏற்பட்ட வரலாறு ஆச்சரியமானது.

சங்கரர் தமது முக்கியச் சீடரிடம் அதிக அன்பு கொண்டிருந்தார். அதைக் கண்ட ஏனைய சீடர்களுக்குப் பொருமை ஏற்பட்டது. இதைப் போக்க நினைத்த சங்கரர் கங்கைநதியின் ஒரு கரையில் இருந்துகொண்டு மற்றெரு கரையில் இருந்த ஸனந்தனரை நோக்கி, "துணியைக் கொண்டு வா" என்று கட்டளையிட்டார். கங்கையில் வெள்ளம் கரை புரண்டு ஓடிக்கொண்டிருந்தது. ஆனல் ஸனந்தனருக்கு அது பொருட்டல்ல. குருவாகிய சங்கரரிடம் கொண்ட பக்தி அளித்த துணிவே துணையாகக் கங்கையில் இறங்கினர். அவருடைய குரு பக்தியைக் கண்ட கங்காதேவி அவர் இட்ட ஒவ்வோர் அடியிலும் தாமரைப் பூவை வைத்து வழி காட்டி அவரைக் கரைசேர்த்தாள். ஸனந்தனரின் குருபக்தியின் மேன்மையைப் புரிந்துகொண்ட மற்றச் சீடர்கள் பொருமையை விடுத்தனர். அன்று முதல் ஸனந்தனரும் சங்கரரால் பத்மபாதர் என்று அழைக்கப்பட்டு அனைவராலும் கொண்டாடப் பட்டார்.

இவ்விதம் பெருமை வாய்ந்த யோகீசுவரரான பத்மபாதருக்கே ஒரு சமயம் சோதனை ஏற்பட்டது. பிரகலாதனுக்கு அருளிய நரசிம்மமூர்த்தியின் மேல் எல்லையற்ற பக்தி கொண்ட பத்மபாதர் அந்த மூர்த்தியை நேரிலே காண வேண்டுமென்ற அவா உந்தக் கடுமையான தவத்தில் ஈடுபட்டார். நீண்ட காலம் தவம் செய்தும் பகவானின் பிரத்யட்ச தரிசனம் கிடைக்கவில்லை. அது காரணமாக அவர் பெரிதும் வருந்தினர்.

காட்டில் அமர்ந்து பத்மபாதர் வருந்திப் புலம்பிக் கொண்டிருந்தார். அப்போது அந்த வழியாகச் சென்ற ஒரு வேடனுக்கு அவரிடம் இரக்கம் தோன்றியது. அவரை நெருங்கி, "சுவாமி, தங்களைப் பார்த்தால் துறவி போல் இருக்கிறது. ஆனல் மனவருத்தமும், மெய்வருத்தமும் ஒருங்கே உங்களை வாட்டுவது போல் தோன்றுகிறதே! தங்களுக்கு வந்த கஷ்டம்தான் என்ன?" என்று கேட்டான்.

பத்மபாதர் அவனைச் சிறிது நேரம் உற்று நோக்கினர். பிறகு, 'இவனிடம் என் குறையை வெளியிடுவதால் என்ன பிரயோஜனம்?" என்பது போல் அமைதியாக இருந்துவிட்டார். அவருடைய குறையைத் தீர்த்து அவருக்கு நன்மை செய்ய உறுதி கொண்ட வேடன், "சுவாமி இந்தக் காட்டிலே உங்களை எந்த மானுடனே அல்லது விலங்கோ துன்புறுத்தினர்களா? யார் என்று சொல்லுங்கள். எங்கே இருந்தாலும் கட்டி இழுத்து வந்து உங்கள் முன் நிறுத்தி விடுகிறேன். தயவு செய்து சொல்லுங்கள்" என்று வேண்டினன். அவனுடைய உறுதியைக் கண்ட பத்மபாதர் 'நரசிம்மம்' என்று முணு முணுத்தார்.

வேடனுக்குப் புரியவில்லை. காட்டிலே பிறந்து வளர்ந்து அலைந்து கொண்டிருக்கும் அவனுக்குச் சிம்மத்தைத் தெரியும். மற்றக் கொடிய மிருகங்கள் யாவும் அத்துபடி. ஆனல் நரசிம்மத்தைப் பற்றிக் கேள்விப்பட்டதுமில்லை, பார்த்ததுமில்லை, தன் சந்தேகத்தை போக்கி கொள்ள அவரையே அவன், "சுவாமி, தாங்கள் குறிப்பிடும் இந்த நரசிம்மம் எப்படி இருக்கும்? எந்தப்புதரில் வசிக்

கும்? அதன் அங்க அடையாளங்களைச் சொல்லுங்கள். நான் இழுத்து வருகிறேன்'' என்றான்.

அவனது அறியாமையைப் புரிந்துகொண்ட பத்மபாதருக்கு அவனை அலட்சியம் செய்ய மனமில்லை. ''அப்பா, நரசிம்மம் ஒரு மிருகம் மாத்திரமல்ல. மனிதனும் மிருகமும் சேர்ந்த பகவானின் ஓர் அவதாரம். அந்த அவதார மூர்த்தியைக் காண வேண்டியே தவம் செய்தேன். ஏனோ இன்னும் எனக்கு அந்தப் பாக்கியம் கிடைக்கவில்லை'' என்று சொல்லி, நரசிம்மமூர்த்தியின் தெய்விக வடிவத்தை அவனுக்கு விளக்கமாகக் கூறினார்.

வேடன் பத்மபாதரை வணங்கிப் புறப்பட்டான். அவனுக்கு என்னமோ அந்தக் காட்டிலேயே அந்த நரசிம்மத்தைக் கண்டு பிடித்துவிடலாம் என்ற நம்பிக்கை துளிர்த்து வளர்ந்தது. காலையிலிருந்து மாலைவரையில் வேறு சிந்தனையே இல்லாமல் பத்மபாதர் குறிப்பிட்ட நரசிம்மமே தியானமாய்த் தேடித் தேடி அலைந்தான். கருணையே வடிவான கடவுள் அவனுடைய ஒரே நிலையான சிந்தனையை மெச்சி அவனுக்கு இரங்கி மானிடமும் சிங்கமும் கலந்த உருவத்துடன் காட்சியளித்தார். உடனே அந்த வேடன் அந்த நரசிம்மத்தைக் கட்டிப் பிணைத்து இழுத்துவந்து பத்மபாதரின் முன்னால் நிறுத்தி, ''சுவாமி, இதோ பாருங்கள். தாங்கள் கேட்ட நரசிம்மம்'' என்று கூறி வணங்கினான்.

கண்ணைத் திறந்து பார்த்த பத்மபாதருக்கு வேடனைத் தவிர வேறு உருவம் கண்ணில்படவில்லை. வேடனை வெறுப்புடன் நோக்கினார். அவனோ தன் கண்ணுக்கு மட்டுமே தெரியும் நரசிம்மத்தைச் சுட்டிக் காட்டி, '' இங்கே, இங்கே'' என்று அவருடைய பார்வையைத் திசை திருப்ப முயன்றான். பத்மபாதருக்கு உண்மை புரிந்து விட்டது. வருத்தம் மேலிட்டு, ''இந்த வேடனுக்குக் கிடைத்த பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லையே. என்ன சோதனை?'' என அரற்றிக் கடவுளைத் துதித்தார்.

உடனே நரசிம்மமூர்த்தி அவர் முன் தோன்றி ''வேடன் ஒருமுகப்பட்ட உள்ளத்துடன் அதே தியானமாகத் தேடினான். ஆகவே அவனுக்கு மிக்க விரைவில் தரிசனம் கொடுத்தேன். இனி உனக்கும் நினைத்த மாத்திரத்தில் வருகிறேன்'' என்று அருளி மறைந்தார். உடனே வேடனும் மறைந்து விட்டான்.

பிறகு ஒரு சமயம் தியானத்தில் ஆழ்ந்திருந்த ஆதிசங்கரரைக் கொல்ல வந்த காபாலிகனை நரசிம்ம ஆவேசம் வந்த பத்மபாதர் கிழித்துப்போட்டு விட்டார். இந்த நரசிம்ம ஆவேசத்தைப் பற்றிச் சங்கரர் வினவ, பத்மபாதர் மேற்கண்ட நிகழ்ச்சியை விவரித்ததாக வரலாறு.

## சித்திகள் வேண்டாம்

ஆதிசங்கரர் ஒருமுறை ஒரு மரத்தினடியில் உட்கார்ந்திருந்தார். அப்போது அந்த இடத்திற்கு ஒருவன் வந்து சேர்ந்தான். அவன் ஆதிசங்கரரிடம், ''இதோ பார், நான் ஓர் அதிசயம் செய்துக் காட்டுகிறேன்'' என்றான்.

மறுகணம் அவன், காக்கையாக மாறி வானத்தில் இப்படியும் அப்படியுமாகப் பறந்தான். சிறிது நேரம் கடந்தது. மீண்டும் அவன் சுய உருப் பெற்று சங்கராசாரியார் முன்பு வந்தான். ''பார்த்தாயா என் திறமையை?'' என்று கர்வத்தோடு சங்கரரை நோக்கிக் கேட்டான். தான் பெற்று இருந்த சித்தியைக் குறித்து ஆணவத்தினால் அவனுடைய மண்டைக்கனம் அதிகரித்திருப்பதை ஆதிசங்கரர் அறிந்துகொண்டார்.

சங்கராசாரியார் எந்தவிதப் பதற்றமும் இல்லாமல் அவனைப் பார்த்துச் சொன்னார். ''இதற்காகவா நீ ஜபம், தியானம் என்று தவ வாழ்க்கையை மேற்கொண்டாய்? தூய்மையான சந்நியாசிகளைத் தூற்றினால், உனக்குக் காக்கை ஜன்மம் வாய்த்து விட்டுப் போகிறது!''

சங்கரர் சொன்னதைக் கேட்ட பிறகு, விருப்பாகத் தனது சித்தியைக் காட்டிய மனிதனுக்குப் புத்தி வந்தது.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரும் சித்தி பெற வேண்டும் என்ற ஆசையைப் பழித்துப் பேசியிருக்கிறார். உண்மையான ஞானவாழ்க்கையின் இலட்சியத்துக்கும் சித்தியைப் பெறுவதற்கும் தொடர்பே கிடையாது. இதை விளக்கப் பரமஹம்சதேவர் அருளிய தத்துவக் கதை ஒன்றைப் பார்க்கலாம்.

ஆற்றின் கரையிலிருந்த ஒருவரிடம் ஒருவன் சென்றான். ''நான் பன்னிரண்டு ஆண்டுக்காலம் தவம்செய்து சித்தி பெற்றவன். இதோ, இப்போது என் சித்து விளையாடலைப் பார்'' என்று சொல்லிவிட்டு, ஆற்றின் அருகே சென்றான். பிறகு ஆற்றின் மேலே நடந்தான். அப்படியே அடுத்த கரையைச் சென்றடைந்தான். பிறகு பழையபடியே தண்ணீரின்மேல் நடந்து திரும்பி வந்தான்.

இதை எல்லாம் பார்த்துக் கொண்டிருந்த முதலாமவன், ''இதற்காகவா பன்னிரண்டு வருஷம் தவம் செய்தாய்? ஓரணாக் கொடுத்தால் ஓடக்காரன் உன்னை அந்தக் கரைக்குக் கொண்டுபோய் விட்டு விடுகிறான். இந்த ஓரணாவைச் சேமிப்பதற்குப் பன்னிரண்டு வருடமா செலவிட வேண்டும்?'' என்றான்.

இதைக் கேட்டபிறகு, சித்து விளையாடல் என்பது பிரமாதமானதல்ல என்பதைச் சித்தியைக் காட்ட வந்தவன் புரிந்துகொண்டான்.

சங்கரரின் வாழ்வில் நடந்த சம்பவத்தை இந்தக் கதை நினைவுபடுத்துகிறது அல்லவா?

— விவேகானந்ததாசன்



# ஸ்ரீராமகிருஷ்ணரின் அற்புதம்—அத்புதானந்தர்

ஏ. சுப்பிரமணியம் எம். ஏ.
ஸ்ரீராமகிருஷ்ண–விவேகானந்த மன்றம், ஆர்காடு.

ஸ்ரீராமகிருஷ்ணரே ஓர் அற்புதம். அந்த அற்புதம் இந்த உலகத்தில் எவ்வளவோ அற்புதங்களை நிகழ்த்தியது. அவர் நிகழ்த்திய அற்புதங்களில் மிகச் சிறந்த அற்புதம் எது என்று சிலர் சுவாமி விவேகானந்தரைக் கேட்டார்கள். சுவாமிஜி தங்களோடு அமர்ந்திருந்த, படிப்பு வாசனையே இல்லாத, முன்னால் ஆடு மேய்த்துக் கொண்டிருந்த, இப்போதும் சரியான நாட்டுப்புறத்தான் போலிருந்த சகோதரச் சன்னியாசி ஒருவரை அவர்கள் முன்னால் நிறுத்தி, "இதுதான் ஸ்ரீராமகிருஷ்ணர் நிகழ்த்திய அற்புதங்களில் மிகச் சிறந்த அற்புதம்" என்றார். அப்படிச் சுவாமி விவேகானந்தரால் ஸ்ரீராமகிருஷ்ணரின் அற்புதம் என்று சொல்லப்பட்டவர், லாட்டு மகராஜ் என்று ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்களாலும் பக்தர்களாலும் அன்போடு அழைக்கப்படும் சுவாமி அத்புதானந்தர்.

### தண்ணீரில் சிலை! தங்கத்தில் அலை!

பொன்னிலிருந்து நகைகளையும், கல்லிலிருந்து சிலைகளையும் செய்வது சுலபம். ஆனால் தண்ணீரிலிருந்து சிலையையும், தங்கத்திலிருந்து அலைகளையும் உருவாக்குவது மிகவும் கடினம், முடியாத செயல். லாட்டுவை அத்புதானந்தராக மாற்றியதன் மூலம், ஸ்ரீராமகிருஷ்ணர் முடியக்கூடாத அந்தச் செயலை முடித்துக் காட்டினார். அ, ஆ, என்று சொல்லவே தெரியாத அந்த ஆடு மேய்த்த பட்டிக்காட்டான் காலடியில், சாஸ்திரங்களைப் படித்த பெரிய பெரிய மேதைகள் எல்லோரும் கைகளைக் கட்டி உட்கார்ந்து கொண்டு, அவர் வாயிலிருந்து வரும் வேதச்சொற்களைக் கேட்பதற்குக் காத்துக் கிடக்கும்படி அவர் செய்தார்.

### ஆடுகள் மேய்த்திடும் பையன்

லாட்டு மகராஜ் என்று அழைக்கப்பட்ட அத்புதானந்தரின் இயற்பெயர் ரகோத்ராம் என்பது. பிகாரில் சப்ரா மாவட்டத்தில் ஒரு சின்னஞ் சிறு கிராமத்தில் பரம ஏழையாக இருந்த பெற்றோர்களுக்கு அவர் மகனாகப் பிறந்தார். நாளெல்லாம் கூலிகளாக உழைத்த அவருடைய பெற்றோர்களுக்கு இரவு ஒருவேளை கூட வயிறார உணவு உண்ணும் நிலை இல்லை. அதனால் தங்கள் மகனைச் சிறுவயதிலேயே ஆடு மேய்க்க அனுப்பினார்கள். மகன் ஆடு மேய்த்து உயிர் வாழும் வாழ்க்கையை காணும் பேறு கூட அவர்களுக்கு அதிக காலம் இல்லை. அவனுக்கு ஐந்து வயதாகும் போதே ஊரில் பரவிய காலரா நோய்க்கு இருவரும் பலியானார்கள். அவனுடைய சித்தப்பா அவனை எடுத்து வளர்த்தார். கொஞ்ச காலத்தில் அவருக்கும் போதாத காலம் வந்தது. கிராமத்தை விட்டுப் பிழைப்பதற்காக கல்கத்தா வந்தார். பையன் ரகோத்ராமையும் உடன் அழைத்துக் கொண்டு வந்தார். அங்கு அவர் ஒரு வேலையில் அமர்ந்த பிறகு, பல நாள் கல்கத்தா முழுவதும் அலைந்து ரகோத்ராமை ஒரு பணக்கார வீட்டில் எடுபிடி வேலை செய்யும் வேலைக்காரப் பையனாக அமர்த்தினார்.

### பூஜைக்குப் படைத்த மலர்

பூஜைக்கு ஒரு மலர் படைக்கப்பட்டது என்றால், அது எந்தக் காட்டில் மலர்ந்தாலும் இறைவனுடைய திருவடிக்கே வந்து தீரும். அப்படி எங்கோ முன் பின் தெரியாத பிகார் மாநிலத்துப் பட்டுக்காட்டுக் கிராமம் ஒன்றில் பிறந்த ரகோத்ராம் கல்கத்தா நகரில் ஸ்ரீராமகிருஷ்ணருடைய பெரும் பக்தரான ராமச்சந்திர தத்தாவின் வீட்டிற்கு வேலைக்காரனாக

வந்து சேர்ந்தான். ராமச்சந்திர தத்தா மிகப் பெரிய பக்தர். அவர் வீடு எப்பொழுதும் ஒரு கோயில் போலவே பூஜையோடும், பஜனையோடும் விளங்கும். இளவயதிலிருந்தே தூய்மையே உருவாக, கடவுள் பக்தி நிறைந்திருந்த ரகோத்ராமின் மனதில் இந்தப் பக்தி நிறைந்த சூழ்நிலை ஆழமான தெய்விகத்தைத் தூண்டிவிட்டது.

### காணாத ஏக்கம்

ராமசந்திர தத்தா அடிக்கடி ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்திக்கத் தட்சிணேசுவரம் போவார். வீட்டில் அடிக்கடி அவருடைய தெய்விகத்தைப் பற்றியே பேசிக்கொண்டிருப்பார். அவர் மூலம் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றி அறிந்த ரகோத்ராம் அவரை எப்படியும் சந்திக்க வேண்டும் என்று முடிவு செய்தான். ஒரு நாள் புறப்பட்டும் போய்விட்டான். ரகோத்ராமை முதலில் பார்த்தவுடனே ஸ்ரீராம கிருஷ்ணர் அந்தச் சிறுவனின் ஆன்மிக ஆழத்தை அளந்து கண்டு விட்டார். ரகோத்ராமும் அவரைப் பார்த்தவுடனே தன் மனம் அவரிடம் போய் ஒன்றி விட்டதை அறிந்தான். அந்த முதல் சந்திப்பிற்குப் பிறகு ரகோத்ராமால் ராமச்சந்திர தத்தா வீட்டில் முன்பு போல் மனமொன்றி வேலை செய்ய முடிய வில்லை. எந்நேரமும் தட்சிணேசுவரக் கோயிலில் உள்ள ஸ்ரீராமகிருஷ்ணரே அவன் நினைவில் வந்து கொண்டிருந்தார்.

இந்த நேரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரத்திலிருந்து தன் சொந்த ஊரான கமார்புகூருக்குப் போய் எட்டு மாதங்கள் தங்கிவிட்டார். இந்த இடைவெளியில் ரகோத்ராம் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தேடி அடிக்கடி தட்சிணேசுவரம் வந்தான். ஒவ்வொரு முறையும் ஸ்ரீராமகிருஷ்ணரைக் காணாமல் ஏக்கமும் வேதனையும் அடைந்தான். கண்கலங்கி அந்தக் கோயிலில் உட்கார்ந்து கொண்டு யாரும் பார்த்து விடாமல் அழுதான். ஸ்ரீராமகிருஷ்ணர் தங்கியிருந்த அறைக்கும், அவர் உலாவுகின்ற வராந்தாவிற்கும் அடிக்கடி சென்று நின்றான். எட்டு மாதங்கள் இப்படியே கழிந்தன. இறுதியில் ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரம் வந்து சேர்ந்தார். ரகோத்ராமும் அவருக்குத் தொண்டு செய்யும் வேலைக்காரனாக ராமச்சந்திர தத்தாவின் அனுமதியோடு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்து சேர்ந்தான்.

### அல்லும் பகலும் பயிற்சி

ரகோத்ராமிற்குப் படிப்பு அறவே இல்லை. படிப்பதில் அதிக அக்கறை காட்டாத ஸ்ரீராமகிருஷ்ணர் அவனுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தார். அவர் எவ்வளவு முயன்றும் அவனுக்குப் படிப்பு ஏறவே இல்லை. கிராமத்தில் ஆடு மேய்த்துக் கொண்டும், நகரத்தில் எடுபிடி வேலைகள் செய்து கொண்டும் இருந்த படிப்பே ஏறாத அவனுக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் தாயாகவும், தந்தையாகவும், ஆசிரியராகவும், குருவாகவும் இருந்து தெய்விகத்தைப் புகட்ட ஆரம்பித்தார்.

காளியைக் கோயிலில் எப்படி வணங்க வேண்டும் என்பதிலிருந்து, காமநினைவுகள் தோன்றினால் அவற்றை மனதிலிருந்து எப்படி விரட்டுவது என்பது வரை ஒவ்வொன்றையும் அவர் அவன் மனதில் பதியவைத்தார். ரகோத்ராமும் ஸ்ரீராமரிடம் ஆஞ்சனேயர் எப்படி அடிமையாகவும், பக்தராகவும், தொண்டனாகவும் உயிருமாக இருந்தாரோ அப்படி ஸ்ரீராமகிருஷ்ணரிடம் இருந்தான். ஸ்ரீராமகிருஷ்ணரின் ஒவ்வொரு வார்த்தையையும் அப்படியே கடைப்பிடித்து நடந்தான். ஒரு நாள் முன்னிரவில் கொஞ்சம் தூங்கிவிட்ட ரகோத்ராமை ஸ்ரீராம கிருஷ்ணர், "முட்டாள்! பொழுது போவதற்குள் தூக்கமா? இரவெல்லாம் கண் விழித்து அல்லவா தியானம் செய்ய வேண்டும்? இருட்டியதுமே தூங்குகிறாயே! தூங்குவதற்கா இங்கே வந்தாய்? தூங்குவதாக இருந்தால் இங்கிருந்து ஓடிப்போ!" என்று விரட்டினார். அன்று முதல் என்னென்னவோ பயிற்சிகள், முறைகள், யுக்திகளை எல்லாம் கடைப்பிடித்து இரவில் சிறிது நேரங்கூடத் தூக்கம் வராத நிலையை ரகோத்ராம் உண்டாக்கிக் கொண்டான்.

இப்படி ஆன்மிகச் சாதனங்களில் ஒவ்வொன்றையும் பழகி, ரகோத்ராம் இறுதியில் தன் குருநாதரின் அருளால் இறைவனையும் காணும் ஆற்றல் பெற்றார். அதன் பின் ஸ்ரீராமகிருஷ்ணர் காசிபூர் மாளிகையில் தன் உடல் வாழ்வை நீத்தார். அப்போது தனக்கென்று வீடோ, வாசலோ, உறவினரோ இல்லாத ரகோத்ராம், அன்னை சாரதா தேவி குருதேவரைப் பிரிந்த தன் துயரத்தை ஆற்றிக் கொள்ளப் பிருந்தாவனம் சென்றபோது, அவர் மகனாக உடன் சென்றார். அங்கிருந்து திரும்பியதும் பாராநகரில் விவேகானந்தர் ஏற்படுத்தியிருந்த மடத்தில் சேர்ந்து சன்னியாசியாகி அத்புதானந்தர் ஆனார்.

### விவேகானந்தரும், அத்புதானந்தரும்

அத்புதானந்தர், அவருடைய ஆழமான தெய்விகத்திற்காகவும், குழந்தை போல உலக நடவடிக்கை எதுவுமே தெரியாமல் ஆண்டவனையே முற்றிலும் எதிர்பார்த்து வாழ்ந்த வாழ்க்கைக்காகவும்,

அவருடைய சகோதரச் சீடர்கள் பெரிதும் விரும்பினார்கள். விவேகானந்தர் அவரிடம் ஆழ்ந்த அன்பு கொண்டிருந்தார்.

விவேகானந்தர் அமெரிக்காவிலிருந்து திரும்பியதும், கல்கத்தாவில் அவருக்குப் பெரிய வரவேற்புக் கொடுக்கப்பட்டது. அவருடைய சகோதரச் சீடர்கள் அத்தனை பேரும் அதில் கலந்து கொண்டு அவருடன் ஊர்வலத்தில் வந்தார்கள். ஆனால் லாட்டு மகராஜ் மட்டும் வரவில்லை. விவேகானந்தருக்கு அளிக்கப்பட்ட அந்தப் பெரிய வரவேற்பையும், அவருடன் வந்த பெரிய மனிதர்களையும் வெள்ளைக்காரச் சீடர்களையும் கண்ட லாட்டு மகராஜ் மிகவும் பயந்து போய் மடத்திலேயே தங்கி விட்டார்.

ஆனால் விவேகானந்தர், வந்தவர்களிடமெல்லாம் "லாட்டு எங்கே,? லாட்டு எங்கே?" என்று கேட்டுக்கொண்டே இருந்தார். கடைசியில் அவரைப் பார்த்ததும், அவருடைய இரண்டு கைகளையும் பெருமகிழ்ச்சியோடு பிடித்து இழுத்துத் தன் பக்கத்தில் இருத்திக்கொண்டு, "நீ ஏன் மற்றவர்களோடு என்னைப் பார்க்க வரவில்லை?" என்றார். எதையும் வெள்ளையாகப் பேசும் அத்புதானந்தர், நான் எப்படி அங்கே வரமுடியும்? நான் தான் படிப்பே இல்லாத முட்டாளாயிற்றே! நீங்கள் எவ்வளவு பெரிய ஊருக்கெல்லாம் போய் எவ்வளவு பெருமையோடு வருகிறீர்கள்! உங்களோடு வரும் பெரிய மனிதர்களைப் பார்ப்பதற்கே எனக்குப் பயமாக இருக்கிறது. தகுதியில்லாத நான் அங்கே வந்தால் உங்களுக்கு அவமானம் ஏதாவது நிகழ்ந்து விடுமோ என்று நான் வரவில்லை" என்றார்.

இதைக்கேட்ட விவேகானந்தர் மிகுந்த பாசத்தோடு அவரை அணைத்துக் கொண்டு, "டேய் லாட்டு, அப்படியெல்லாம் நினைக்காதே! இதோ பார், நான் விவேகானந்தன் இல்லை. அதே பழைய நரேன்தான். நீயும் அந்தப் பழைய லாட்டுதான். இதில் கொஞ்சங்கூட மாற்றம் இல்லை" என்று சொல்லி, பெரிய மனிதர்கள் அமர்ந்திருந்த அந்தப் பந்தியில் அவர் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போய்த் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டார்.

### உன்னை அமெரிக்காவிற்கு அனுப்புகிறேன்

லாட்டு மகாராஜிடம் இவ்வளவு பாசம் வைத்திருந்த விவேகானந்தர் அவருடைய குழந்தைத் தனத்தைக் கண்டு அடிக்கடி வேடிக்கை செய்வார். ஒருமுறை எல்லாச் சீடர்களும் அமர்ந்திருந்தபோது லாட்டு மகராஜை வேடிக்கை செய்ய வேண்டுமென்று, "டேய் லாட்டு! இந்த முறை உன்னைத் தான் அமெரிக்காவிற்கு அனுப்பப் போகிறேன். நீ தான் நம் குருமகராஜோடு அதிக நாட்கள் ஒன்றாக இருந்தாய். அதனால் நீ தான் போய்ப் பிரசாரம் செய்ய வேண்டும்" என்றார். இதைக் கேட்டதும் அது உண்மை என்று நினைத்துப் பயத்தால் மிகவும் வெளுத்துப் போனார் லாட்டு மகராஜ். தம்மால் முடியாது என்று எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தார். சுவாமிஜி கொஞ்சமும் மசியவில்லை. நாளைக்கு உன்னைக் கையையும் காலையும் கட்டிக் கப்பலில் ஏற்றிவிடுகிறேன்" என்றார். அவ்வளவு தான், அன்று இரவு யாருக்கும் தெரியாமல் லாட்டு மகராஜ் மடத்திலிருந்து கல்கத்தாவிற்கு ஓடி விட்டார். அங்கே ஒரு பக்தரின் வீட்டில் யாருக்கும் தெரியாமல் ஒளிந்து கொண்டார்.

அவ்வளவு கள்ளங்கபடு இல்லாத சுவாமி அத்புதானந்தரின் வாழ்க்கை அற்புதங்கள் நிறைந்த பெரும் அற்புத வாழ்க்கையாகவே இருந்தது. அவருடைய வரலாற்றை அறிந்த பலரும் அவர் அடைந்திருந்த தெய்விகப் பெருநிலையைக் கண்டு பேராச்சரியம் அடைந்தனர். பலருக்கு மிக உயர்ந்த போதனைகளை வழங்கி, அவர்களுடைய ஆன்மிக வாழ்க்கையை அவர் வளப்படுத்தினார்.

இறுதியில் தன் முடிவுக்காலம் நெருங்குவதை அறிவித்தும் அவர் தன்னிடம வரும் எல்லோருக்கும் தெய்விகத்தை அளிக்கும் விச்வேசுவரனின் காசியை அடைந்தார். அங்கே தம்முடைய விச்வேச்வரனாகிய ஸ்ரீராமகிருஷ்ணரை நினைத்தவாறே 1920ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 27ஆம் நாள் அவர் திருவடிகளை அடைந்தார். ★

---

இறைவனின் ஒளிவிளக்காய்த் திகழும் மக்களுக்கு எந்தவித உதவியும் செய்யாமல் மக்களை வாட்டி, இறைவனுக்குப் பூசைகள் நாட்டுவதால் எவ்விதப் பிரயோஜனமும் இல்லை. அதனை இறைவன் ஏற்றுக்கொள்ள மாட்டான். பசியால் வாடும் மக்களுக்கு உதவுவதே சீவகாருண்ய ஒழுக்கமாகும். அதுவே பக்திக்கு வித்தாகும்.

—வடலூர் வள்ளலார்



# திருவரங்கத்து எம்பெருமான்

ந. கடிகாசலம். எம். ஏ., டிப். லிங்.,



திவ்யகவி என்று புகழப்பெறும் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இயற்றியருளிய எட்டு நூல் களின் தொகுப்பே 'அஷ்டப்பிரபந்தம்' என வழங்கப்பெறுகிறது. 'அஷ்டப்பிரபந்தம் கற்றவன் அரைப் பண்டிதன்' என்ற சிறப்பு பெற்ற இந்தத் தொகுப்பு, ஆழ்வார் பெருமக்கள் அருளிச்செய்த திவ்யப்பிரபந்தங்களின் சாரமாகக் கருதப்பெறு கிறது.

### திருவரங்கனே பிரான்

திருவரங்கத்து எம்பெருமான்தான் தமக்குத் தலைவன்; அவன் ஒருவனுக்கே தாம் அடிமை; தம்முடைய எண்ணம் அரங்கனைத் தவிர வேறு ஒருவர்மீதும் செல்லாது என அறுதியிட்டு உரைக் கிறார் ஐயங்கார்.

எம்பெருமானுக்கும் தமக்கும் இடையேயுள்ள ஸ்வஸ்வாமி பாவ உறவை—இறைவன் தலைவன், நாம் அவனுடைய உடைமை என்ற உறவை— உணர்ந்துகொண்டு, இனி அவன் ஒருவனுக்கே தொண்டு புரிந்து ஒழுகுவதாகக் கூறுகிறார். 'மற்று ஒருவர்மேல் என் கருத்து உளவோ' என்ற குறிப்பினால், ஐயங்காரின் வாய் அரங்கனை அன்றிப் பிறரை வாழ்த்தாது, ஐம்புலன்களும் அவனுக்கே பணிவிடை புரியும் என்பது பெறப்படுகிறது. இந்தக் கருத்தைப் பின்வருமாறு வலியுறுத்துகிறார்.

''கேசவனையே செவிகள் கேட்க; திருஅரங்கத்து
ஈசனையே சென்னி இறைஞ்சிடுக; —நேசமுடன்
கண்ணனையே காண்கஇரு கண்;இனர்கொள் காயாம்பூ
வண்ணனையே வாழ்த்துகஎன் வாய்'' (20)

[கேசவன்— 1. பிரமனையும் உருத்திரனையும் தன் அங்கத்தில் கொண்டவன். 2. அழகிய மயிர் முடியை உடையவன்; 3. கேசி என்ற அசுரனைக் கொன்றவன்]

மனிதப்பிறவி எடுத்ததன் பயன்—இறைவனை மனதினால் நினைத்தலும், வாயால் துதித்தலும், கைகளால் பூசித்தலும், கால்களால் பிரதட்சிணம் செய்தலும், தலையால் வணங்குதலும், கண்களால் தரிசித்தலும், செவிகளால் அவன் புகழ் கேட்டலும், மூக்கினால் அவன் தன் மாலையை மோந்து நுகர் தலுமே என்பதைக் குறிக்கிறார் ஐயங்கார்.

அவருடைய இந்தப் பாடல்,

வாயவனை யல்லது வாழ்த்தாது, கையுலகம்
தாயவனை யல்லது தாம்தொழா,—பேய்முலைநஞ்சு
ஊணாக உண்டான் உருவொடு பேரல்லால்,
காணாகண் கேளா செவி.

—முதல் திருவந்தாதி-11.

என்ற பொய்கையாழ்வார் பாசுரத்தை நம் நினைவுக் குக் கொண்டு வருகிறது.

### அரங்கனின் பெருமை

திருவரங்கத்தை இடமாகக் கொண்ட எம்பெரு மானின் பெருமைகளை-அவதாரச் சிறப்புக்களை- ஒரு பாடலில் (10) தொகுத்துத் தருகிறார் ஐயங்கார். 1. காளியன் என்ற நாகத்தின் மேல் நடனம் ஆடிய வன்; 2. வலிமை மிக்க சிவனுடைய வில்லை ஒடித்தவன்; 3. அடர்ந்த காட்டை நடந்து கடந்தவன்; 4. பூமியைக் கோட்டால் குத்தி எடுத்தவன்; 5. குரவைக் கூத்து ஆடியவன்; 6. கடலில் அணை கட்டியவன்; 7. கோசலையால் பெறப்பட்டவன்; 8. வீசுகிற திருப்பாற்கடலின் அலையில் பொருந்தியவன்; 9. முரன் என்ற அசுரனை அழித்தவன்; 10. கரன் என்ற அரக்கனை அழித் தவன்; 11. தன் அடியவர்க்கு மோட்சம் அளிப் பவன்; 12. கஜேந்திரனால் 'ஆதிமூலமே' எனக் கூவி அழைக்கப்பட்டவன்; 13. பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவன்; 14. பிரபத்தியை (சரணா கதி)த் தன்னை அடையும் வழியாக உடையவன்;

15. ஆலிலையைப் படுக்கையாகக் கொண்டவன். ஆகிய இத்துணைப் பெருமைகளையும் கொண்டவனே திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பவன் என்கிறார் ஐயங்கார்.

இவை மட்டுமின்றி, கணக்கிட முடியாத பெருமையை உடையவன் அரங்கன் என்கிறார். திருவரங்கனுக்கு உணவு-பதினான்கு உலகங்கள்; படுக்கை-ஆதிசேஷனையுடைய திருப்பாற்கடல்; மனைவியர்—பூமகளும் நிலமகளும்; வீற்றிருக்கும் இடம்—வேதங்களுக்கும் எட்டாத பரமபதம்; வாகனம்—கருடன்; குமாரன்—பிரமன்; பேரன்—உருத்திரன்; ஏவலர்-இந்திரன் முதலான முப்பத்துமூன்று கோடி தேவர்கள்; விளையாட்டுப் பொருள்—உலகமும் உயிர்களும் என்ற பெருமைகளையுடைய அரங்கநாதனை வாழ்த்த வல்லார் எவரேனும் உண்டோ என்று ஒரு பாடலில் (32) வியக்கிறார் ஐயங்கார்.

**ஐயங்காரின் பெருமிதம்**

"அழகிய அரங்கநாதனே! மாவலியினிடத்து நீ மூன்றடி மண் இரந்து கேட்டு, ஈரடியால் உலகை அளந்து கொண்டபோது—மண்ணுலகம் மூவுலகிலும் பரவிய உன் திருவடிகள், அந்தத் திருவடிகளைத் தன்னுள் அடக்கிக்கொண்ட என்மனம் ஆகிய இவற்றுள் எது பெரிது?" என்று வினவுகிறார் ஐயங்கார். எம்பெருமானின் திருவடிகள் உலகங்களையெல்லாம் ஈரடிக்குள் அடக்கிக் கொண்டமையால் அவை மிகப் பெரியன; அந்தத் திருவடிகளைத் தம் நெஞ்சு தம்முள் அடக்கிக் கொண்டிருப்பதால், அவனுடைய திருவடிகளைக் காட்டிலும் தம் நெஞ்சமே பெரிது என்று பெருமிதம் கொள்கிறார் ஐயங்கார். திருவடிகளை நெஞ்சில் அடக்கிக்கொள்ளுதல் என்பது, திருவடிகளை எப்பொழுதும் உள்ளத்தில் கொண்டு தியானித்தல் என்பதாகும். இந்தக் கருத்து அமைந்த பாடல் இது:-

"சேவடியால் மூவடிமண் தென்னரங்கத்து அம்மான்நீ
மாவலிபால் வாங்கியநாள் மண்ணுலகோ—மூவுலகும்
வீசுங்கா லோவலிய வெவ்வினையேன் நெஞ்சமோ
பேசுங்கால் ஏதோ பெரிது 29

[சேவடி-சிவந்த பாதம்; மாவலி-மகாபலி சக்கரவர்த்தி; வீசும் கால்-பரவிய கால்]

வன்மையான கொடிய வினைகளையுடைய நெஞ்சம் தமதாக இருந்தாலும் எப்போதும் அரங்கனின் திருவடிகளை நெஞ்சில் வைத்து தியானிப்பதனால் அது பெருமை மிக்கது என்பதை இந்தப் பாடல் உணர்த்துகிறது.

**வணங்குவோர் பெறும் பயன்**

அரங்கனை வணங்குகிறவர்கள் பெறும் பயன் குறித்தும் ஐயங்கார் பாடியுள்ளார். அரங்கனை எம் பெருமான் என்று எண்ணி அன்புடன் நெஞ்சு உருகித் துதிக்கவல்ல அடியவர்கள் வைகுண்டத்தை அடைவர். இதை,

பொன்னரங்கம் என்றே
மாலாய் இரங்கவல்லார்க்கு எய்தலாம்
திருவைகுந்தமே (3)

என்ற அடிகளில் தெரிவிக்கிறார். மேலும், திருவரங்கம் பெரியகோயிலில் பாம்பணையில் பள்ளி கொண்டருளும் எம்பெருமானின் திருநாமங்களில் ஏதேனும் ஒரு திருநாமத்தையேனும் உச்சரித்தவர்கள் சிவன், தேவேந்திரன், பிரமன் ஆகியோரைவிட மேன்மையாக வீற்றிருப்பர் (4)

**அரங்கநாதனை வணங்குங்கள்**

திருவரங்கநாதனை வணங்கிப் பயன் பெறும்படி அறிவுரை கூறுகிறார் ஐயங்கார். 1) ஆய்ப்பாடியில் ஆயர் வீட்டில் வளர்ந்தவனும், அனந்தன் என்ற பெயரை உடையவனும், அரவணையில் பள்ளி கொண்டு அருள்புரிகிற மாயவனுமாகிய திருவரங்கனை வணங்குங்கள். அங்ஙனம் வணங்குவீரேயானால் உலகத்தில் வேறு சில மதங்களைத் தேடி அலையும் பேய்த்தன்மையான அறிவை விட்டு, எழுவகைப் பிறவிகளைப் போக்கி முக்தி பெறுவீர்கள் (13); 2) எம்பெருமானை வணங்க மறந்திருப்பவர்களே! நீங்கள் திருவரங்கம் பெரிய கோயிலைச் சேர்ந்து, அதனால் உங்கள் மாறுபாடுகள் எல்லாம் ஒழிந்து போமேயானால் தாம் வீற்றிருக்கிற பரமபதத்தை அளித்து அரங்கநாதர் அருள் புரிவார்.

திருவரங்கம் திருக்கோயில்
சேர்ந்துமது திருக்கு ஒயில்
தருவர் என்றும் வைகுந்தம் (41)

[திருக்கு-மாறுபாடு; ஒயில்-ஒழிந்தால்] என்று அரங்கனின் கருணையையும் புலப்படுத்துகிறார்.

**திருவரங்கனை வணங்குபவர் பெருமை**

இனி, திருவரங்கநாதனை வணங்கும் அடியார்க்கு உரிய பெருமை குறித்து ஐயங்கார் கூறும் கருத்துக்களைக் காண்போம். கற்பதற்கு உரிய எல்லா நூல்களையும் கற்றுத் தேர்ந்தவர்களேயானாலும், பதினான்கு உலகங்களையும் கண்டவர்களேயாயினும் நீக்குதற்கு அரிய இருவகைப் பற்றுக்களும் நீங்கியவர்களேயாயினும் திருமால் அடியார்களாக இல்லாதார் மோட்சம் பெறத் தகுதியில்லாதவர்கள்

ஆகின்றனர். திருமகளின் கணவனுன திருமால் துயிலும் திருவரங்கம் பெரியகோயிலைப் பணிந்து வணங்குவோர் மேற்குறிப்பிட்ட கற்றல், காணுதல், அறுதல் ஆகிய குணங்களைக் கொண்டில்லாவிட்டாலும் முக்தி பெறுபவர்களாகிறுர்கள் என்பது ஐயங்கார் கருத்து. இதனை,

கற்ருர் எனினும், பதினல்உலகும்
கண்டார் எனினும், தண்டாமிகுபற்று
அற்ருர் எனினும், திருமால்அடியார்
அல்லாதவர் வீடுஇல்லாதவரே;
பொற்ருமரையாள் கணவன்துயிலும்
பொற்கோயிலையே புகழ்வார், பணிவார்,
மற்று ஆர் எனினும், பெற்ருர் அவரே
வானேர்திருமா மணிமண்டபமே. (5)

[தண்டா-நீங்குதலரிய; பொற்ருமரையாள்-பொன்தாமரை மலரில் விற்றிருக்கும் திருமகள்; பொற்கோயில்-திருவரங்கம்; வானேர்-நித்திய சூரிகள்.]

என்று பாடலாக வடித்து நமக்குத் தந்துள்ளார். மேலும், எம்பெருமானை வணங்கித் தொண்டு புரிவதே ஒருவருடைய மேன்மைக்குக் காரணம், உயர் குலப்பிறப்பு அன்று; அவ்வாறு தொண்டு புரியாமல் வணங்காமல் இருப்பதே தாழ்ச்சிக்குக் காரணம், இழிகுலப் பிறப்பன்று என்பதைக் கீழ்வரும் பாடலில் தெரிவிக்கிறுர்: —

பாதியாய் அழுகியகால் கைய ரேனும்,
பழிதொழிலும் இழிகுலமும் படைத்தா ரேனும்,
'ஆதியாய் அரவணையாய்!' என்ப ராகில்
அவரன்றே யாம்வணங்கும் அடிகள் ஆவார்;
சாதியால் ஒழுக்கத்தால் மிக்கோ ரேனும்
சதுர்மறையால் வேள்வியால் தக்கோ ரேனும்
போதினன் முகன்பணியப் பள்ளி கொள்வான்
பொன்னரங்கம் போற்ருதார் புலையர் தாமே (15)

[மிக்கோர்-உயர்ந்தோர்; சதுர்மறை-நான்கு வேதங்கள்; வேள்வி-யாகம்; தக்கோர்-சிறந்தோர்; போதில் நான்முகன்-தாமரைமலரில் தோன்றிய பிரமன்.]

மேலும், இன்னெரு பாடலில் (100) திருவரங்கனையே தஞ்சம் எனக்கொண்டு வாழ்வோர் இழிந்த குலத்தில் பிறந்தவர்களேயானுலுங்கூட அவர்கள் தாம் தேவர்கள், முனிவர்கள், சிவன், பிரமன் ஆகியோரைவிட மிகுந்த சிறப்பை உடையவர்கள் என்று பலபடப் புகழ்கிறுர். ஐயங்காரின் இந்த இரண்டு பாடல்களும் தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச்செய்த பாசுரங்களைத் (திருமாலை, 42, 47) தழுவி அமைந்திருப்பதை ஒப்பிட்டு நோக்குவதனுல் அறிய முடிகிறது. ☆

## திலகரின் அறிவுரை

லோகமான்ய பால கங்காதர திலகர்பெருமானை 1906-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் சூரத் காங்கிரஸில் முதன்முதலாகச் சந்தித்தேன். என்னை ஒரு பிரதிநிதியாகப் பதிவு செய்துகொண்டேன். காங்கிரஸ் மகாநாடு அமைதியாக நடைபெருது என்றும், சண்டைகள் நேரலாம் என்றும், என்னைப் போன்றவர்கள் (சாண்டோ) தங்கினுல் அபாயமும் இரத்தப் பெருக்கும் ஏற்படலாம் என்றும், எனவே அங்கிருந்து வெளியேறும்படியும் புத்திமதி கூறினுர்.

1909-ஆம் ஆண்டில் திலகர் நாடு கடத்தப்பட்டார். அப்போது நான் கல்கத்தாவில் இருந்தேன். ஜாவா, ஜப்பான் முதலிய இடங்களுக்குச் சென்ற பின் 1910-ஆம் ஆண்டில் பர்மா சென்றேன். ரங்கூனிலிருந்து மாந்தலேக்குத் திலகரைத் தரிசிப்பதற்காகவே சென்றேன். மிகுந்த சிரமத்தின் பேரில் அவரைப் பார்க்க அனுமதி கிடைத்தது.

திலகர்பெருமானைப் பார்த்த மாத்திரத்திலே தலைவணங்கி நின்றேன். ஜெயில் வார்டன் அங்கு இல்லாதிருந்தால் அவர் என்னைக் கட்டித் தழுவி ஆசிர் வதித்திருப்பார்.

''உடல்நிலை எப்படி இருக்கிறது?'' என்று கேட்டேன். அதற்கு அவர் புன்முறுவலுடன், உடல் நிலை சரியாக இருப்பதாகவும், சிறைப்பட்டிருப்பதால் வெளியிலிருந்து தாய்நாட்டுக்குத் தொண்டு செய்ய முடியவில்லை என்றும், சிறைக்குள்ளேயே முடிந்த அளவில் தொண்டு செய்வதாகவும் கூறினுர். ''தேகம் அநித்தியம். ஆத்மா ஒன்றுதான் அழியாதது. நம் சக்தியை நல்ல காரியத்திற்குத்தான் பயன்படுத்த வேண்டும். பயனற்ற காரியங்களில் நம் சக்தியை வீணுக்கக்கூடாது. தம் தாய் நாட்டுக்குத் தொண்டு செய்வதன் மூலமாகத்தான் ஒருவர் உன்னத நிலையை அடையமுடியும். அதற்கு நாடு முழுமையும் உடற்பயிற்சி நிலையங்கள் அமைக்க வேண்டும். சுவாமி விவேகானந்தர் கூறியதை மறக்கவேண்டாம், ''இந்திய இளைஞர்களே! நீங்கள் பகவத்கீதையால் கடவுளை அடைவதைவிடக் கால் பந்தாட்டத்தின் மூலம் கடவுளை அடைவது மேலானது என்று கூறியிருக்கிறுர். நாடு முழுவதும் உடற்பயிற்சி நிலையங்களை அமையுங்கள் உங்கள் முன்னேற்றத்தை நான் சிறைப்பட்டிருப்பதால் நேரில் பார்க்க முடியாவிட்டாலும், என் ஆத்மா பார்த்துக்கொண்டே இருக்கும்'' என்றுர்.

புரொபஸர் (சாண்டோ) கே. ராமமூர்த்தி.
திலகர் நினைவுகள்—இரண்டாம் பக்கம் 93-96

# விவேகானந்தர் வாக்கு



1

மக்களின் எண்ணிக்கையோ, செல்வமோ, வறுமையோ முக்கியமல்ல. சொல், செயல், சிந்தனைகளால் ஒன்ருக விளங்கும் ஒரு சிலரால் உலகையே ஆட்டிவைக்க முடியும்—இந்த உண்மையை எப்போதும் மறந்துவிடாதீர்கள். எதிர்ப்பு ஏற்படுவது நல்லதுதான். அணைபோட்டுத் தடுக்காவிட்டால் ஓர் ஆறு வேகத்தைப் பெற முடியுமா ? ஓர் இயக்கம் புதிதாகவும் நன்மை தருவதாகவும் இருக்கும் அளவுக்கேற்ப ஆரம்பத்தில் எதிர்ப்புக்களைச் சந்திக்கவும் நேரும். இந்த எதிர்ப்புகள்தாம் பிறகு வரப்போகும் வெற்றிக்கு அறிகுறியாகும்.

2

பாராட்டப்படுகிறேனே இல்லையோ, இந்த இளைஞர்களை ஒன்று திரட்டிச் செயலில் ஈடுபடச் செய்வதற்காக நான் பிறந்திருக்கிறேன். அதுமட்டுமல்ல, ஒவ்வொரு நகரத்திலும் நூற்றுக்கணக்கான பேர் என்னுடன் சேர்ந்துகொள்ளத் தயாராக இருக்கிருர்கள். அவர்களைத் தடுத்து நிறுத்தவே முடியாத அலைகளைப்போலப் புரட்டி அடித்துக்கொண்டு போகும் வகையில் இந்தியா முழுவதும் அனுப்பி வைக்க விரும்புகிறேன். அவர்கள் மிகத் தாழ்ந்தவர்களாகவும் சமுதாயத்தால் நசுக்கப்பட்டவர்களாகவும் உள்ளவர்களின் வீட்டு வாயிலுக்கே சென்று, வசதி, ஒழுக்கம், மதம், கல்வி ஆகியவற்றைக் கொண்டு சேர்ப்பார்கள். இதை நான் சாதித்தே தீருவேன்! அல்லது செத்து மடிவேன் !

3

நீங்கள் உண்மையிலேயே என் குழந்தைகளானல், எதற்குமே அஞ்சி ஸ்தம்பித்து நின்றுவிடமாட்டீர்கள். நீங்கள் சிங்க ஏறுகளைப் போலத் திகழ்வீர்கள். இந்தியாவையும், இந்த உலகம் முழுவதையுமே நாம் தட்டியெழுப்பியாக வேண்டும். தங்களுடைய பணியைச் செய்து முடிப்பதற்காகத் தீயில் குதிப்பதற்கும் என் குழந்தைகள் தயாராக இருக்கவேண்டும.

4

ஓ பாரதநாடே! உன் பெண்மையின் இலட்சியம் சீதை, சாவித்திரி, தமயந்தி என்பதை நீ மறந்துவிடாதே! நீ வணங்கும் தெய்வம் யோகிகளுக்கெல்லாம் பெரிய யோகியும் எல்லாவற்றையும் துறந்துவிட்ட சங்கரரும் ஆகிய உமாபதியே என்பதை நீ மறக்க வேண்டாம். உன் திருமணம், உன் செல்வம், உன் வாழ்க்கை ஆகியவை உன் ஐம்புலன் இன்பத்துக்காக அல்ல. உன் தனிப்பட்ட சுய இன்பத்துக்காகவும் அல்ல என்பதை நீ மறந்துவிடாதே. தேவியின் பலிபீடத்தில் பலியாவதற்கென்றே பிறந்திருக்கிருய் என்பதை நீ மறக்காதே. தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள், அறியாமை மிக்கவர்கள், ஏழைகள், கல்வியறிவற்றவர்கள், சக்கிலியர், தோட்டிகள் ஆகிய இவர்கள் அனைவருமே உன்னுடன் இரத்தத் தொடர்புடைய நெருக்கமான உறவினர்களே, உன் உடன்பிறந்த சகோதரர்களே என்பதை நீ மறந்துவிடாதே.

5

எங்கெல்லாம் கொள்ளைநோய் பரவுகிறதோ, பஞ்சம் ஏற்படுகிறதோ, மக்கள் துன்பத்தில் வாடுகிருர்களோ அங்கெல்லாம் நீங்கள் அனைவரும் சென்று அவர்களுடைய துன்பத்தைக் குறைக்க முயற்சி செய்யுங்கள். மிஞ்சிப்போனல் இந்த முயற்சியில் அதிகப்பட்சம் நீங்கள் உயிரிழக்க நேரிடலாம். அதனலென்ன ? உங்களைப்போல எத்தனை எத்தனையோ பேர் நாள்தோறும் புழுக்களைப்போலப் பிறப்பதும் இறப்பதுமாக இருக்கிருர்கள். அதனல் இந்தப் பரந்த உலகத்திற்கு என்ன குறைந்து போய்விட்டது ? மரணம் வருவதோ உறுதி. ஆனல் இறப்பதற்கு என்று மேலான

இலட்சியத்தைக் கொண்டிரு. மேலானதொரு குறிக் கோளுக்காக வாழ்ந்து இறந்துபோவது மிகவும் சிறந்தது.

6

மேலைநாட்டு உதவி எதையுமே நீங்கள் நம்பி இருக்கக்கூடாது. தனி மனிதர்களைப் போலவே நாடு களும் தங்களுக்குத் தாங்களே உதவி செய்து கொள்ள வேண்டும். இதுதான் உண்மையான தேசபக்தியாகும். ஒரு நாடு அவ்விதம் செய்ய முடியாமற் போனால், அதற்கு உரிய சரியான நேரம் இன்னும் வரவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். அப்படிப்பட்ட நாடு, காலம் வரும் வரையிலும் சற்று காத்திருக்கத்தான் வேண்டும்.

7

மரணம் வரும் வரையிலும் வேலை செய். நான் உன்னுடன் இருக்கிறேன். நான் இறந்த பிறகும் என் ஆவி உன்னுடன் இருந்து வேலை செய்யும். இந்த வாழ்க்கை வருவதும் போவதுமாக இருக் கிறது. செல்வம், புகழ், இன்பங்கள் இவை எல்லாமே ஏதோ ஒரு சில நாட்களுக்குத்தான் நிலைத்திருக்கப்போகின்றன. உலகப்பற்று நிறைந்த ஒழு புழுவைப்போல இறந்துபோவதைவிட, உண் மையை எடுத்துப் போதித்துக் கொண்டே கடமை என்னும் களத்திலே உயிரை விடுவது மிகமிக மேலானது. முன்னேறிச் செல் !

8

கவலைப்பட வேண்டாம். பெரிய மரத்தின் மீது தான் புயற்காற்று மோதுகிறது; கிளறி விடுவதால் நெருப்பு மேலும் நன்றாக எரிகிறது; தலையில் அடி பட்ட பாம்பு படமெடுக்கிறது என்று இப்படி எவ் வளவோ சொல்லிக் கொண்டே போகலாம்.

நெஞ்சு புண்பட்டு வேகும்போதும், துன்பப்புயல் நம்மைச் சுற்றி நாலாபுறங்களிலும் வீசும்போதும், இனி வாழ்க்கையில் ஒளியையே காணமுடியாதோ என்று தோன்றும் போதும், நம்பிக்கையும் துணிவும் கிட்டத்தட்ட அறவே நம்மை விட்டு அகன்று விட்டபோதும், அப்படிப்பட்ட ஒரு பெரிய ஆன்மிகப் புயல் சூழ்ந்த நிலையின் நடுவில் தான் பிரம்மத்தி னுடைய ஒளி நமது உள்ளத்தினுள் பிரகாசிக்கிறது.

ஆடம்பர வாழ்க்கையின் மடியிலே தாலாட்டப் பட்டு வளர்ந்தவன், ரோஜா மலர்ப் படுக்கையில் படுத்திருப்பவன் எப்போதுமே ஒரு துளிக்கண்ணீர் சிந்தாதவன் எவனோ, அவன் என்றைக்காகிலும் சான்றோனாக ஆகியிருக்கிறானா? இத்தகையவன் என்றைக்காகிலும் தனக்குள் இருக்கும் பிரம்மத்தை மலரச் செய்திருக்கிறானா?

9

அறிவு, உள்ளம் ஆகிய இரண்டில் எதைப் பின் பற்றுவது என்ற போராட்டம் எழும்போது உள்ளம் சொல்வதையே நீங்கள் பின்பற்றுங்கள்.

ஏனென்றால் அறிவுக்கு, பகுத்தறிவு என்னும் ஒரே ஒரு நிலை மட்டும்தான் உண்டு. அந்த ஒரு நிலைக்குள் இருந்தபடியே அறிவு வேலை செய்கிறது. தனக்கு உரிய அந்த எல்லையைக் கடந்து அறிவு செல்ல செல்ல முடியாது.

அறிவாற்றலால் ஒருபோதும் செல்லவே முடியாத மிகஉயர்ந்த மனநிலைக்கு, இதயம் ஒருவனை அழைத்துக் கொண்டு போகிறது. இதயம், அறிவை யும் கடந்து தெய்விக அருள் என்னும் நிலையை அடைகிறது. அன்புள்ளம் கொண்ட மக்களுக்குப் பாலிலிருந்து வெண்ணெய் கிடைக்கிறது. அறிவாற் றல் நிறைந்த மக்களுக்கோ எஞ்சியுள்ள மோர் மட்டுமே கிடைக்கிறது.

10

நாம் அனைவரும் நேர்மையானவர்களாகத் திகழ் வோமாக. இலட்சியத்தை நம்மால் பின்பற்ற முடிய வில்லை என்றால், நமது பலவீனத்தை நாம் ஒப்புக் கொள்வோம். ஆனால் இலட்சியத்தை நாம் இழிவு படுத்தாமல் இருப்போமாக. இலட்சியத்தைத் தாழ்ந்த நிலைக்குக் கொண்டுபோக எவரும் முயற்சி செய்ய வேண்டாம்.

11

மனிதகுலம் பிழையிலிருந்து உண்மைக்குச் செல்லவில்லை என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். மாறாக, உண்மையிலிருந்து மற்றோர் உண்மைக்குத்தான் பிரயாணம் செய்கிறது. தாழ்ந்த ஓர் உண்மையிலிருந்து உயர்ந்த மற்றோர் உண்மைக்கு மனிதகுலம் செல்வதாக நீங்கள் கருத லாமேயன்றி, பிழையிலிருந்து உண்மைக்குச் செல்கி றோம் என்று நினைப்பது பொருந்தாது.

12

உயிரினம் தாழ்ந்ததாக இருப்பதற்கேற்ப, புலன் இன்பத்தை நாடும் நாட்டமும் அவற்றில் மிகுந்து காணப்படும். மக்களில் ஒரு சிலர் தான் நாய்,

ஓநாய் ஆகியவை உணவைத் தின்னும்போது காட்டும் அதே அளவு ஆர்வத்தோடு உணவைச் சாப்பிட முடியும். ஆனால், நாயும், ஓநாயும் அனுபவிக்கும் இன்பமெல்லாம் புலன்களுக்குள்ளேயே அடங்கிவிடுகின்றன.

எல்லா நாடுகளிலும் மனித இனத்தில் தாழ்ந்த இயல்புடையவர்கள், புலன் இன்பங்களிலேயே மகிழ்ச்சி அடைபவர்களாக இருக்கிறார்கள். ஆனால் அதே சமயத்தில் பண்பாடு மிக்கவர்களும் படித்தவர்களும், சிறந்த சிந்தனை, தத்துவங்கள், கலைகள், விஞ்ஞானங்கள் ஆகியவற்றில் இன்பம் காண்பவர்களாக இருக்கிறார்கள். ஆன்மிக வாழ்க்கை என்பது இவற்றை எல்லாம் கடந்த மிக உயர்ந்த நிலையில் இருக்கிறது.

## 13

புத்தர், இயேசுகிறிஸ்து போன்ற பெரியோர்களின் வரலாறுதான் இந்த உலகத்தின் வரலாறாகத் திகழ்கிறது. உணர்ச்சி வசப்படாதவர்களும் பற்றற்றவர்களும் இந்த உலகிற்கு மிகுந்த நன்மையைச் செய்திருக்கிறார்கள்.

## 14

வாழ்க்கையில் வெற்றி பெற்ற ஒவ்வொருவரும் பின்னணியில் ஏதோ ஓரிடத்தில் அளவற்ற நேர்மையும், அளவற்ற சிரத்தையும் கொண்டவனாக இருத்தல் வேண்டும். அந்தக் குணங்கள் தான், அவர் வாழ்க்கையில் அடைந்த சிறந்த வெற்றிகளுக்குக் காரணங்களாகும். அவர் முற்றிலும் சுயநலம் அற்றவராக இல்லாமலிருக்கலாம். ஆனால் அப்படி இருப்பதற்கிடையிலும் அவர் சுயநலத்தைத் துறந்து விடும் நிலையை நோக்கிச் சென்றுகொண்டிருப்பவராக இருந்திருப்பார். அவர் அறவே சுயநலம் இல்லாதவராக இருந்திருப்பாரானால், அவர் அடைந்த வெற்றி புத்தர்பிரானின் வெற்றியைப் போன்றோ இயேசுநாதரின் வெற்றியைப் போன்றோ ஒரு மாபெரும் வெற்றியாக விளங்கியிருக்கும். சுயநலமற்ற தன்மையின் அளவு தான், வெற்றியின் அளவினை எல்லா இடத்திலும் நிர்ணயம் செய்கிறது.

## 15

உண்மை, தூய்மை, சுயநலமின்மை ஆகிய இந்த மூன்றும் எங்கெல்லாம் காணப்படுகின்றனவோ, அவற்றைப் பெற்றிருப்பவர்களை நசுக்கக்கூடிய ஆற்றல் விண்ணுலகிலோ மண்ணுலகிலோ எங்குமே கிடையாது. இம்மூன்றையும் பெற்றுள்ள ஒருவனைப் பிரபஞ்சம் முழுவதுமே எதிர்த்து நின்றாலும் அதை எதிர்த்து நிற்கக்கூடிய ஆற்றல் அவனுக்கு உண்டு.

## 16

முன்னேறிக் கொண்டே இரு! முறையற்ற ஒரு செயலைச் செய்து விட்டதாகவே நீ நினைத்தாலும், அதற்காக நீ திரும்பிப் பார்க்க வேண்டாம். அவை போன்ற தவறுகளை முன்பு செய்யாமல் இருந்திருந்தால், இன்று நீ இருக்கும் நிலையை அடைந்திருக்க முடியும் என்று இப்போது நம்புகிறாயா? நீ செய்த தவறுகளை வாழ்த்து; அந்தத் தவறுகள் நீ அறியாமலேயே உனக்கு வழிகாட்டும் தெய்வங்களாக இருந்திருக்கின்றன. துன்பங்களுக்கு நல்வாழ்த்துக்கள்! இன்பங்களுக்கும் நல்வாழ்த்துக்கள்! உன் நிலை எப்படிப்பட்டதாக இருந்தாலும், அதைக் குறித்து நீ கவலைப்பட வேண்டாம். இலட்சியத்தை உறுதியாகப் பற்றிக் கொண்டு முன்னேறியபடியே இரு!

## 17

மற்றவர்களுக்கு நன்மை செய்வது தான் தர்மமாகும். மற்றவர்களுக்குத் தீமை செய்வது பாவமாகும். வலிமையும் ஆண்மையுமே தர்மம். பலவீனமும் கோழைத்தனமும் தீமை. சுதந்திரமான வாழ்க்கை புண்ணியமாக அமைகிறது. மற்றவர்களிடம் அன்பு செலுத்துவதுதான் புண்ணியச் செயலாகும். மற்றவர்களை வெறுத்து ஒதுக்குவதே பாவச்செயலாகும். கடவுள் நம்பிக்கையும் தன்னம்பிக்கையும் கொண்டிருப்பது தர்மம். சந்தேகப்பட்டுக் கொண்டிருப்பதே பாவம். ஒருமைப்பாடு காண்கிற ஞானமே தர்மமாகும். வேற்றுமையைக் காண்பது தான் பாவச் செயலாக அமைந்திருக்கிறது.

## 18

தற்காலத்தில் ஒருவன் மோசஸ், இயேசுகிறிஸ்து, புத்தர் ஆகியவர்களின் மேற்கோள்களை எடுத்துக் காட்டாகச் சொன்னால், அவன் ஏளனத்துக்கு ஆளாகிறான். ஆனால் ஒரு ஹக்ஸ்லி, டின்டால், டார்வின் ஆகிய இவர்களின் பெயர்களை அவன் சொல்லட்டும். அவர்களுடைய கருத்து என்னவாக இருந்தாலும் மக்கள் அதை அப்படியே கேள்விக்கிடமின்றி நம்பிவிடுகிறார்கள்.

'ஹக்ஸ்லி இப்படிச் சொல்லியிருக்கிறார்' என்று குறிப்பிட்டால் அதுவே பலருக்குப் போதுமானதாக இருக்கிறது.

# ராஜ்கோட்டில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு ஓர் ஆலயம்

குஜராத் மாநிலத்தைச் சேர்ந்த ராஜ்கோட் ஸ்ரீராமகிருஷ்ண ஆச்ரமம், தனது பொன் விழாவைக் கொண்டாடுகிறது. இவ் விழாவையொட்டி பகவான் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு, இருபத்திரண்டு லட்சம் ரூபாய் செலவில், ஒரு பெரிய ஆலயம் கட்டினர். இவ்வாலயம் கல்கத்தாவிற்கருகிலுள்ள பேலூர் மடத்து பகவான்ஸ்ரீராமகிருஷ்ணரின் ஆலய அமைப்பை ஒத்திருக்கிறது. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோருடைய சர்வ மத சமரசக் கொள்கையை பிரதிபலிக்கும் வகையில், இவ்வாலயத்தில் இந்து, பௌத்த, கிறித்தவ, இஸ்லாமிய மதங்களின் கலைச் சிற்பங்கள் அமைந்திருக்கின்றன. ஆலயத்தின் ஒவ்வொரு கலை நுணுக்கமும் மதத் தத்துவங்களை விளக்குகின்றன.

இக்கலைக் கோயிலில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் சலவைக் கல்லாலான உருவச் சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. இப் பிரதிஷ்டை, ஸ்ரீராமகிருஷ்ண மடம்—சங்கம் ஆகியவற்றின் தலைவரான ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ் அவர்களால், ஏப்ரல் 6-ஆம் தேதி செய்யப்பட்டது.

குஜராத் மாநிலத்திலுள்ள பரந்த மனப்பான்மை படைத்த பெருமக்களின் உதவியுடன் கட்டிமுடிக்கப்பட்ட இவ்வாலய விழாவிற்கு நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் சுமார் இரண்டாயிரம் பக்தர்கள் யாத்திரையாக வந்து கலந்து கொண்டனர். சாதி மத வேறுபாடின்றி எவரும் வந்து பிரார்த்தனை பண்ணும் வகையில் அமைந்த இவ்வாலய உற்சவத்திற்கு குஜராத் மாநிலத்தைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான பக்தர்கள் காலையிலிருந்து இரவு வரை திரள் திரளாக வந்தனர்.

இவ் விழாவையொட்டி நடந்த பொதுக் கூட்டத்தில், குஜராத் மாநில முதல்வர் இவ்வாலயத்தைப் பற்றி மிகவும் புகழ்ந்து பேசினர். இம்மாநிலத்தில் துவாரகை, சோமநாத் போன்ற முக்கிய தீர்த்த ஸ்தலங்கள் இருப்பது போல் இந்த மாபெரும் ஆலயமும் ஒரு புனித யாத்திரை ஸ்தலமாக அமையும் என்று பெருமைப்படுத்திக் கூறினர்.

* * * * *



# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை - 600 004

## 1979 மே மாத நிகழ்ச்சிகள்

1-5-79 செவ்வாய் ஸ்ரீ சங்கர — ஸ்ரீ ராமானுஜ ஜயந்தி, திதி பூஜை

6-5-79 ஞாயிறு பொதுக் கூட்டம்: மாலை 5-30 முதல் 7 மணி வரை
தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்
பேச்சாளர்கள்: டாக்டர் P. K. சுந்தரம் (தமிழ்)
டாக்டர் R. பாலசுப்ரமணியம் (தமிழ்)

12-5-79 சனி புத்த ஜயந்தி

13-5-79 ஞாயிறு பொதுக் கூட்டம் : 5-30 முதல் 7மணி வரை
தலைவர்; சுவாமி தபஸ்யானந்தர்
பேச்சாளர்: டாக்டர் எஸ். கோபாலன் (தமிழ்)

சத்சங்கம் : ஞாயிறுதோறும் மாலை 4 மணிமுதல் 6-30 மணிவரை
ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (27-5-79)
ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (20-5-79)

மாலை 4-30 மணி முதல் 5-30 மணி வரை சொற்பொழிவு (தமிழ்)
ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் - திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (20-5-79)
ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் - திரு வி. எஸ். வி. குருசாமி சாஸ்திரிகள் (20-5-79)

மாலை 5-30 மணி முதல் 6-30 மணி வரை சொற்பொழிவு (ஆங்கிலம்)
ஸ்ரீமத் பகவத் கீதை – சுவாமி கபீரானந்தர் (20-5-79 & 27-5-79)

வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள் (மாலை 6-00) வழக்கம் போல் திங்கட்கிழமை முதல் வெள்ளிக்கிழமை வரையிலும் நடைபெறும்

**சிறப்புச் சொற்பொழிவுகள்:** சனிக்கிழமைகளில் மாலை 6-00 மணிக்கு
ஸ்ரீமத் பாகவதம் —திரு பி. ராமகிருஷ்ணன் (19-5-79)

**விசேஷ தினங்கள்**

20-5-79 ஞாயிறு : அந்தர் யோகம் (சாதனை தினம்)

7-5-79 & 22-5-79 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்கு பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

25-5-79 வெள்ளி : ஸ்ரீ பலகாரினி காளி பூஜை (மாலை வழிபாட்டின் பின்)

27-5-79 ஞாயிறு: ஸ்ரீ சியாம நாம சங்கீர்த்தனம் (மாலை வழிபாட்டின் பின்)

**மடத்தைச் சேர்ந்த சாதுக்களால் சென்னை நகரத்தில் நடத்தப்பெறும் வேறு சில நிகழ்ச்சிகள்**

12-5-79 சனி மாலை 5-30 மணிக்கு ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்
இடம் : 7, கெல்லிஸ் ரோடு, கீழ்ப்பாக்கம்

12-5-79 சனி மாலை 6-30 மணிக்கு ஸ்ரீமத் பகவத்கீதை
இடம் : இல. 18, 9-வது லேன், சாஸ்திரி நகர்

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி : 71231

தலைவர்,

ஸ்ரீ ராமகிருஷ்ணமடம், சென்னை-600 004.

வெளிநாடுகளுக்கு ஆண்டுச் சந்தா விவரம் : இலங்கை (இந்திய நாணய மதிப்பில்)—ரூ. 12 யு. எஸ். ஏ.—$ 4 பிற நாடுகள்— £ 2. ஆயுள் சந்தா : இலங்கை — ரூ-150 யு. எஸ்.ஏ பிற நாடுகள் £ 25.

தனிப் பிரதி வெளிநாடு ரூ. 2